

The members of the newly constituted T.T.D. Board are seen in the picture



*கண்ணா வானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு*
*தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே*

**மண்ணுலகத்தார்க்கும், விண்ணுலகத்தார்க்கும் எப்போதும் கண்ணாக இருப்ப வன் யாவனென்னில் குளிர்ச்சி நிறைந்த திருவேங்கடமென்கிற பெயரையுடைய நித்ய ஸூரிகட்கிடமான திருமலையை உடையவன்.**

*—திருவாய்மொழி - திவ்யார்த்த தீபிகை-3*

# ஸப்தகிரி


ஜனவரி - 1991

தனிப்பிரதி ரூ. 1 | மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 8


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில் : பகலவனின் 'உத்தராயண' புறப்பாடு
—ஜெகதீஷ்

2-ம் பக்கம்
3-ம பக்கம் : தி தி.தே. புதிய பொறுப்பாண்மைக் குழு
விசாகப்பட்டிணத்தில் புதிய திருமண மண்டபமும, திருப்பதியில் சாது சுப்ரமண்ய சாஸ்திரி அவர்களின் நூற்றாண்டு விழா நிகழ்ச்சி

பின்னட்டையில் : போகித் திருநாள் — மா ஸ்ரீ.


சிறப்பாசிரியர்

திரு. எம். வி. எஸ். பிரசாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ

துணையாசிரியர்:

திரு. எம். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன் . . . .

நீந்துவன, ஊர்வன, நடப்பன, பறப்பன, நிற்பன என்ற வகையில் பல உயிர்கள் இம்மண்ணில் திகழ்வது அவ் இயற்கையின் படைப்பின் பெருமையைக்காட்டும். பலதரப்பட்ட இவ்வுயிர்களிடமிருந்து விலகி, அவற்றினின்றும் மேம் பட்டதாக ஒரே ஒரு உயிரினம மட்டும் அவ் இறைவனின் படைப்பில் அருமை பெருமை உடையதாக விளங்குகிறது. அது தான் மனிதப் பிறவி. இப்பிறவியிடம் அமைந்த 'சிந்தனை' எனும் உணர்வே மற்றைய உயிர்களிடமிருந்து அவனை உயர்த் திக்காட்டுகிறது. சிந்தனை என்பது இறைவனால் மனிதனுக்கு அளிக்கப்பட்ட சிறந்த வரமாகும். இலை, தழைகளை இடையில் அணிந்து, குகைகளிலும், மரப்பொந்துகளிலும் மிருகங்களோடு மிருகமாய் வாழ்ந்து கொண்டிருந்த மனிதன் தன் சிந்தனையினால், 'ஆள் பாதி ஆடை பாதி' எனும் அளவிற்குப் பொழுதும் ஒரு ஆடையாக அணியவும், வானமே கூரையாக வாழ்ந்தவன் அவ்வானத்தையே தொட்டுவிடும் அளவிற்கு மாட மாளிகைகளைக் கட்டி வாழவும் தெரிந்து கொண்டான். ஒலி எழுப்பிச் சைகைகளைக் காட்டி எண்ணங்களைப் பரிமாறிக் கொண்டவன், மொழி ஒன்றினை ஏற் படுத்தி, தன் சிந்தனையை மேலும் சீராக்கிக் கொண்டான். பாலத்தில் மிருகமாக இருந்த மனிதன் மற்றவர்களையும் மற்ற உயிர்களையும் தனது சிந்தனையினால் நேசிக்கத் தெரிந்து கொண்டான். அதனால்தான் அன்பின் ஆதிக்கத்தின் வலிமையினையும், அதனால் விளைந்திடும் அமைதியின் அருமையினையும் அறிந்து கொண்டான்.

மகிழ்ச்சி அளித்திடும் இவ் அமைதியான வாழ்க்கையை மனிதன், தன் இனம் என்றும் பெற்றிடும் வகையில் பல வாறு சிந்திக்க ஆரம்பித்தான். சிந்தனையின் விளைவாக 'அன்பு' எனும் ஓர் அரும் பெரும் குணமே அவனுடைய மற்றைய அறப்பண்புகளுக்கும் அடிப்படை இலக்கணமாகத் திகழும் என்பதை அறிந்த அவனுள், அப்பண்பு வளரவும் போற்றப் படவும் வழி என்ன என்று கேள்விபிறந்தது. இதன் விளைவாக இயற்கையை நேசிக்கக் கற்றுக்கொண்டான். இயற்கையின் அதிசய ஆற்றல்களைக் கண்டு வியந்தான். பின்னர் அவ் இயற்கையின் பின்னணியில் கண்ணுக்குத் தெரி யாத 'சக்தி' ஒன்று இயங்கி வருகிறதோ எனும் உணர்வு அவனுள் தோன்ற, அச் 'சக்தியை' அச்சத்துடனும், விருப்பத்துட னும் ஆராதிக்க ஆரம்பித்தான் இதுவே 'சமயம்' ஏற்பட வழிகோலிற்று எனலாம். பொறாமையாலும், வேற்றுமை யாலும், கோபத்தாலும். பகைமையாலும் பல்வேறு சூழ்நிலைகளில் பாதிக்கப்பட்ட மனிதன் தன் வாழ்க்கை அமைதிக்கு, இறைநம்பிக்கையினைப் பரப்பிடும் சமயமே சிறந்த வழிகாட்டும் என்று நம்பினான். இவ்எண்ணமே உலகின் பல மூலை களில் பல சமயங்களைத் தோற்றுவிக்க வழிவகுத்தது. ஆம், உலகின் எல்லாச் சமயங்களும் அன்பின் ஆற்றலையும், அவசியத்தையும் வலியுறுத்தவே தோன்றின.

இந்து சமயத்தைப் பொறுத்தவரை வாழ்க்கை வேறு, சமயம் வேறல்ல. இயற்கையாகவே இலக்கண வரம்புகளைக் கொண்ட இலக்கியமாகவே இந்து சமயம் விளங்குகிறது. 'வாழு, வாழ விடு' எனும் இயற்கை அறவுரை யினை மானிடம் மறந்து விடும் போது வாழ்க்கை ஓர் நரகமாகவே அமைந்து விடுகிறது. பாரதத்தின் இரு கண்களாக விளங்கிடும் மகாபாரதத்திலும், இராமாயணத்திலும் விளங்கிடும் கதாபாத்திரங்களும், நிகழ்ச்சிகளும் இன்று தம்மிடையே வேறுபாடுகள்பல கொண்டு நடமாடிடும் மக்களுக்கும், நடைபெற்றுவரும் நடவடிக்கைகளுக்கும் சிறந்த முன்னுதார ணங்களாகும். அவை நல்ல படிப்பினையைப் போதிக்கவும் செய்கின்றன. நமது பிரச்சனைகளுக்குத் தீர்வாகவும் அமைகின்றன.

தன் மகனென்றும் பாராது, பிரகலாதனை பல வழிகளில் கொல்லத் துடித்த இரண்யகசிபுவின் செய்கை, 'தான்' எனும் மமதையின் உறைவிடமாக அமைவதைப் பார்க்கிறோம். கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் இடையே அமைதி காக்கத் தூது சென்ற அசுவத்தாமன் தன் குலப் பெருமையினையும், தொழில் தகுதியினையும் பாராது உத்தரையின் கருவைச் சிதைக்க முயற்சித்ததும், உபபாண்டவர்களைக் கொன்றதும் கோபத்தின் எல்லை யைக் காட்டும். தேவகணங்களின் இருப்பிடமான தேவேந்திரனே சேவகன் வடிவில் வஞ்சகம செய்து அசுரக் குலத்தின தாயான அதிதியின் கருப்பையில் நுழைந்து உள்ளிருந்த பிண்டத்தை ஏழு துண்டுகளாக்கிய செய்கை பதவி வெறியின் இறுதி நிலையை விரித்துக் கூறும் இப்பதவி வெறியின், 'நான்' 'எனது' எனும மதத்தின் வெளிப்பாடாக அமைவது தன் சகோதரியின் குழந்தைகளைத் தன் கையால் வெட்டிச சாய்த்த கம்சனின செயலாகும இதுபோன்று வாழக்கை யின் எழுச்சி வீழ்ச்சிகளைப் பல வழிகளில் எல்லா சமயங்களும கூறித்தான் உள்ளன.

மேற்கூறிய சமயம் தந்திட்ட, சமயத்தலைவர்கள் கூறிட்ட, ஆன்றோர் புகன்றிட்ட வாழ்க்கை உண்மைகளை மனிதன் வாழ்க்கையில் கடைப்பிடிக்காததாலதான் இன்று இமமண்ணில் நடைபெற, தற்போது அவவபபோது நடை பெற்று வருகின்ற இனப்பூசல்களாலும, மதக்கலவரங்களாலும் மொழிப்பிரச்சனைகளாலும, ஆதிககவெறியாலும் ஏற்படும் வன்முறைகளுக்கும், பிரச்சனைகளுக்கும் பெரிதும் காரணம என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

(48-ம் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்

திருப்பதியை அடுத்துள்ள திருச்சானூரிலுள்ள தி.தி. தேவஸ்வதானத்தாரின் ஸ்ரீ பத்மாவதிதாயார் திருக்கோயிலில் ஆர்ஜித திருப்பாவாடை எனும் சேவை ஒன்று புகுத்தப்பட்டுள்ளது. நபர் ஒருவர் இதற்காக கட்டணமாக ரூ. 3000/- செலுத்தி இச்சேவையில் பங்கேற்கலாம். திருமலைக்கோயிலில் போன்றே ஒவ்வொரு வியாழக்கிழமையிலும் காலை 11 மணியிலிருந்து 12 மணி வரை இச்சேவை நடைபெறும். முழு விவரங்களுக்கு 'உதவிசெயலாட்சித்தலைவர், ஸ்ரீ பத்மாவதி அம்மையார் திருக்கோயில், திருச்சானூர்' எனும் முகவரியுடன் தொடர்புகொள்ளவும்.

ஃ ஃ ஃ

திருப்பதிக்கு வெளியே உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் கோயில்களில் நடைபெறும் ஆர்ஜித கல்யாணோத்ஸவத்தின் கட்டணம் ரூ 200/-லிருந்து ரூ. 300/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

**புதிய பொறுப்பாண்மைக் குழு**

தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுவின் தலைவராக ஹைதராபாத்தைச் சார்ந்த பிரபல தொழிலதிபர் திரு திக்கவரப்பு சுப்பராமி ரெட்டி அவர்கள் 16-12-90 அன்று பதவி ஏற்றார். தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி.எஸ். பிரஸாத் அவர்கள் அன்னார்க்கு பதவி உறுதிமொழி செய்வித்தார். இதுபோது சிறப்பு உதவி செயலாட்சித் தலைவர், இணை செயலாட்சித் தலைவர், கண்காணிப்புப் பொறியாளர் ஆகியோர் உடன் இருந்தனர் இக்குழுவின் மற்றைய உறுப்பினர்கள் பின்வருமாறு: திருவாளர்கள் ஆர். வி. கோயங்கா (கல்கத்தா பிரிட்ஜ் மோஹன் பாமா (பம்பாய்) எம் ரவீந்திராரெட்டி (ஹைதராபாத்), சுங்கு சுப்பலட்சமய்யா (சென்னை) பி. வீரராகவலு, எம். எல். ஏ. (ஹைதராபாத்) பி. பாபய்ய செட்டி (ஸெகந்திராபாத்) எச். ஆர். பஸவராஜ் (பெங்களூர்), வி. துரைசாமிராஜு (சென்னை), திருமதி தாஸரி பத்மா நாராயணராவ் (சென்னை). ஆந்திர மாநில அறநிலையத்துறை ஆணையர் திரு. சே. சத்யராஜ் மற்றும் தி.தி.தே. செயலாட்சித் தலைவர் ஆகியோர் அலுவல் சாரா உறுப்பினர்களாவர்.

ஃ ஃ ஃ

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா அரும்பொருட்காட்சியகக் கட்டிடவளாகத்தில், திருமலைக்கோயிலில் பயன்படுத்தப்பட்ட பட்டுத்துணிகள், வாகனங்கள், பல்லக்குகள் வெண் சாமரங்கள், ஓவியங்கள் போன்றன இடம்பெறும் 'கலைக்கூடப்' பகுதியினை முன்னாள் தி. தி. தே. செயலாட்சித் தலைவரும், விசாகப் பட்டிணம் துறைமுகத் துறையின் தலைவருமான திரு. பி.வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் 25-12-90 அன்று திறந்துவைத்தார்.

ஃ ஃ ஃ ஃ

நாட்டிலும், உலகத்திலும் அமைதி விளங்கிடும் வகையில் ஹைதராபாத்தில் தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் ஸஹஸ்ர சண்டியாகம் மற்றும் அதிருத்ரயாகம் ஆகியன நடைபெற உள்ளன.

ஃ ஃ ஃ

திருமலையில் ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன சீட்டுப்பெறும் யாத்திரிகர்கள் செல்லும் 'க்யூ' கட்டிடம் ஒன்று ரூ. 5.6 கோடி செலவில் விரைவில் கட்டப்படவுள்ளது.

ஃ ஃ ஃ

தில்லியில் தகுந்த இடம் தேர்வு செய்யப்பட்டு அங்கு விரைவில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் சுவாமி கோயில் ஒன்று கட்டப்படும்.

ஃ ஃ ஃ

திருமலைக்கோயிலில் இவ்வருடம் முதற்கொண்டு நடத்தப்படும் வகையில் 'சிறப்பு வழிபாடு' எனும் ஆர்ஜித ஸேவை ஒன்று புகுத்தப்பட உள்ளது.

ஃ

திருப்பதி அரசு பேருந்து நிலையத்திலிருந்து திருமலை அடிவாரமான அலிபிரி வரை செல்லும்படியான சுற்றுச்சாலையில் இந்தியக் கோயில் கலையின் சிறப்பினை விளக்கிடும் வகையில் 4 கல் வளைவுகள் நிறுவப்பட உள்ளன.

ஃ ஃ ஃ

திருப்பதி மற்றும் திருமலையில் பிச்சைக்காரர்கள் இல்லாத வகையில் அவர்களுக்கு மறுவாழ்வு அமைத்துத் தந்திடும் வகையில் விரைவில் அவர்களுக்கென திட்டம் ஒன்று திருப்பதியில் மேற்கொள்ளப்பட உள்ளது.

ஃ ஃ ஃ

தி. தி. தேவஸ்தான நிதி உதவியுடன் திருப்பதியிலுள்ள அரசு திருமலை பேருந்து நிலையம் அதி நவீனப் படுத்தப்பட உள்ளது.

ஃ ஃ ஃ

தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சுப்பராமி ரெட்டி அவர்கள் திருப்பதி நகரமேம்பாட்டிற்குத் தன் பங்காக ரூ. 5 இலட்சத்தினை நன்கொடையாக அளித்துள்ளார்.

ஃ ஃ ஃ

திருமலைக் கோயில் மேலாண்மையின் கீழ் பெயிஷ்காரராக சுமார் 30 வருடம் பணிபுரிந்தவரும், திருமலைக் கோயில் கல்வெட்டுச் செய்திகளை முதன் முதலாகத் தொகுத்தவரும், புகழ்பெற்றஅன்னமய்யாவின் பாடல்களாகக் கொண்ட செப்பேடுகளை கோயிலிலுள்ள இரகசிய அறையிலிருந்து வெளிக்கொணர்ந்து அவற்றை மக்களுக்கு அறிமுகப்படுத்தியவருமான திரு. சாது சுப்ரமண்ய சாஸ்திரி அவர்களின் 100-வது பிறந்தநாள் விழா 17-12- 0 முதல் மூன்று நாட்களுக்கு திருப்பதி ஸ்ரீ அன்னமாசார்ய கலா மந்திரத்தில் தி.தி. தேவஸ்தான சார்பில் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இதுபோது அன்னாரின் புதல்வரான திரு. ாது சதானந்த சாஸ்திரி அவர்கள் கௌரவிக்கப்பட்டார்.

ஃ ஃ

# தமிழர் திருநாள்




தை மாதம் முதல் தேதியன்று இப்பண்டிகை கொண்டாடப்படுகிறது.

"தை பிறந்தால் வழி பிறக்கும்" என்பது ஆன்றோர்களின் அனுபவ பூர்வமான வாக்கு! அந்த நம்பிக்கைக் காரணமாக நாம் தை மாதம்முதல் புதுத்தெம்புடனும், உற்சாகத்துடனும விடாமுயற்சி உள்ளவராகவும் காண்கிறோம்.

தைத் திருநாளை நான்கு நாள் சேர்ந்தாற்போல் கொண்டாடுகிறோம்.

முதல் நாள் "போகி".

இரண்டாம் நாள் "பொங்கல்".

மூன்றாம் நாள் "மாட்டுப் பொங்கல்".

நான்காம்நாள் 'கன்னிப்பொங்கல்'

போகிப் பண்டிகை பொங்கல் பண்டிகைக்கு முதல் நாள் தக்ஷிணாயனத்தின் இறுதி நாளாக கொண்டாடப்படுகிறது. ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் முடிய கொண்டாடப்படும் பண்டிகைகள் அனைத்தும் தக்ஷிணாயன கால பண்டிகைகள் எனப்படும்.

போகிப் பண்டிகை கொண்டாடுவதற்கான காரண காரியங்கள பல சொல்லப்படுவதுண்டு.

நமக்கு ஏற்பட்டுள்ள துயரங்களையும் தொல்லைகளையும் போக்கி, தை முதல் புது வாழ்வு பிறக்கப் போவதால், இந்நாளை "போக்கி" என்கின்றனர். அந்த போக்கி என்ற சொல் நாளடைவில் மருவி போகி என்றானது.

அதனால் நாம் வீட்டிலுள்ள பழைய தேவையற்றப் பொருள்களை வெளியே வீசி விடுகிறோம்.

போகி என்று இந்திரனுக்கு ஒரு பெயரும் உண்டு மழைக்கு அதிபதியான அமரேந்திரன், தானே மூவுலகங்களுக்கும் அதிபதி என்று செருக்குற்றிருந்தான். அவனது செருக்கைப் போக்கத் திருவுள்ளம் கொண்டார் கண்ணபிரான.

ஒரு முறை ஆயர்பாடியில், குழல் ஊதும் கண்ணனிடம், நந்தகோபலனும், உபநந்தனும் மற்றும் பலரும் ஒருங்கு சேர்ந்து, மழை பெய்வதற்காக இந்திர யக்ஞததை முன்னின்று

திருமதி. கே. தேவகிபிரகாஷ்,
திருப்பதி.

நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

அதற்கு நந்தகுமாரன கமலமுகம் மலர, "தந்தையே! ஆன்மாக்களின் நல்வினை தீவினைகட்கு ஏற்ப இன்பமும் துன்பமும் தொடரும். அதற்குக் காரணம் பரம்பொருள். பரமாத்மாவுக்கு வழிபாடுகள் புரிந்து ஆத்மாவை ப்ரீதிப்படுத்தினால் அவனியில் ஆகாதது என்று ஒன்று உளதோ? மலை, நீர், நிலம் எங்கும் நிறைந்த பரிபூரண காரணன் நாரா ணன் இருக்க, மழைக்கு அதிபதியாக அவனால் நியமிக்கப்பட்ட இந் திரனைப் போற்றி என்ன பயன்! இந்திர யக்ஞம் செய்ய வேண்டாம். இந்திராதி தேவர்களுக்கெல்லாம் தேவனான ஸ்ரீமந் நாராயணனுக்கு ப்ரீதியான யக்ஞத்தை நடத்துங்கள். அதுவே உகந்த வழி" என்றார்.

ஆயர் குலத்தவரும், கண்ணனின் வேத விளக்கத்தை ஏற்றுக் கொண் டனர்.

எம்பெருமான் ஆயர்பாடியின் எல்லையில் பெருமலையாக உரு வெடுத்து நின்றார்.

கண்ணபிரான் தந்தையிடம் மேலும் சொல்லலானார். "தந் தையே! அதோ தெரிகின்ற அம் மாமலையை பூஜித்தால் திருமாலைப் பூஜிப்பது போலாகும். கண்டிப்பாக மழை பொழியும்".

நந்தகோபனும் மற்றவர்களும் கண்ணனின் உபதேசப்படி மாமலைக் குப் பெருவிழா நடத்தினர். ஆடிப் பாடி ஆனந்தித்து மகிழ்ந்தனர். கேள்விகள் பல நடத்தி மலையைப் புகையால் சூழச் செய்தனர்.

மழைக்காக வேண்டி தன்னை வணங்காமல் மலையை வணங்கு வதை அறிந்து, வெகுண்ட தேவேந் திரன், "இந்த யாதவர்களையும் அவர்களுக்குத் துர்போதனை சொன்ன சின்னவன் கண்ணனையும் சீரழிக்கிறேன்" என்று கொக்கரித் தான். மேகங்களுக்கு அதிபதியை அழைத்தான்.



அருள்மிகு சுப்ரமணியர் திருக்கோயில்-திருப்பரங்குன்றம், திருமதி. கமலா மாரியப்பன்-கோவை.

"கோகுலத்தில் கொடு மழையாகக் கொட்டுங்கள். யாதவர்களையும் கன்று காளைகளையும் கொன்று குவி யுங்கள்" என்று கட்டளையிட்டான் இந்திரன்.

அக்கணமே கோகுலத்தில் புயல் காற்றுடன் கூடிய கொடிய பயங்கர மழை பெய்யத் தொடங்கியது.

ஆயர் குலம் அபயக்குரல் எழுப் பியது!

அகில லோக நாயகனான கோகுல பாலன், ஆயர்களையும் ஆநிரைகளை யும் காத்து, அமரேந்திரனின் கர் வத்தை அடக்கத் திருவுள்ளம் கொண் டார்.

கோவர்த்தன கிரியை பெயர்த்து எடுத்தார். சுதர்சனம் சுற்றும் திருவிரலில் அம்மலையைத் தாங்கிப் பிடித்தார்; மலை மழையைத் தடுத் தது.

இந்த அற்புதத்தைக் கண்ட இந் திரன் கண்ணனைப் புரிந்து கொண் டான்.

"அபச்சாரம் அபச்சாரம்" என்று அலறி அடித்துக் கொண்டு, கண்ண னின் கனிமலர் பாதங்களைப் பற்றிக் கண்ணீர் வடித்து, பிழை பொறுத்து அருள பிரார்த்தித்தான். கண்ண பிரான், அமரேந்திரனின் பிழையைப் பொறுத்தார்.

"அமரேந்திரா! சங்கராந்திக்கு முதல் நாள் மக்கள் உன் நினைவாக இந்திர விழா கொண்டாடுவார்கள். அந்த விழாவிற்கு உனது போகி என்ற நாமத்தைச் சூட்டி மகிழ் வார்கள்" என்று திருவாய் மலர்ந் தருளினார்.

அன்று முதல் போகிப் பண்டிகை நாடெங்கும் கொண்டாடப்பட்டு வரு கிறது. அதனால்தான் போகிப் பண் டிகைக்கு "இந்திர விழா" என்ற பெய ரும் உண்டானது.

பழந்தமிழர்கள் போகிப் பண்டி கையை ஆரம்ப காலத்தில் இந்திர விழா என்றே கொண்டாடி வந்தனர். அந்த விழா தொடிதோட் செம்

பியன் என்ற சோழ மன்னனால் ஆரம்பிக்கப்பட்டது என்பர். இவ் விழாக்காலங்களில் ஆலயங்களில் இந்திரனுக்காக வேண்டி விசேஷ பூஜைகள் நடைபெறும்.

இதற்கு மறுநாள் தை மாத முதல் நாள் பொங்கல் பண்டிகையாம் நன்னாள்!

அனைவரும் வைகறைத்துயிலெழுந்து நீராடிப் புத்தம்புது உடைகளை உடுத்திக் கொண்டு, ஆனந்தம் பொங்கப் பொங்கல் நாளை எதிர் கொண்டழைப்பர்.

புதுப் பானையில் பொங்கல் செய்து, கரும்பும் மஞ்சளும் சேர்த்து, சூரிய பகவானுக்கு நிவேதனம் செய்து வணங்குகின்றனர்.

பொங்கல் திருநாளின்போது சூரியனுக்குத்தான் பூஜைகள் நடைபெறும். இதனை ஆரம்ப காலங்களில சூரிய விழா என்றே அழைத்து வந்தனர்.

சூரியன் தென் திசை பக்கமாக சஞ்சரிப்பதை நிறுத்தி, வடதிசை திரும்பி தமது சஞ்சாரத்தைத் தொடங்குகிறார். அந்த நாளைத் தான் உத்தராயண புண்ணிய காலம் என்று சிறப்பித்துக் கொண்டாடுகின்றனர். உத்தர அயனம் என்றால் வடக்குப் புறமான வழி என்று பொருள்.

தை முதல் ஆனி கடைசி வரையில் உத்தராயணம் என்பது தேவர்களது பொற்காலமாகும். மற்ற மாதம் இரவுகாலமாகும். சுபகாரியங்களைச் செய்வதற்கு உத்தராயணமே சிறந்த காலமாகும். இறப்பது கூட உத்தராயணத்தில் இறந்தால் நற்கதி கிடைக்கும் என்பர். இது காரணம் பற்றியே மகா பாரதத்தில், போர்க்களத்தில் அடிபட்ட பீஷ்மர், இறப்பதற்காகத் தமது ஜீவனை உத்தராயண காலம் வரை கொண்டு சென்றார்.

சூரியன், தை மாதம் முதல் நாள் தனுர் ராசியைவிட்டு மகர ராசிக்கு வந்து சேருகிறார். அக்காலத்தை மகர சங்கராந்தி, சங்கிரமணம் என்றும் கூறுவர்.

சித்திரை வருஷப் பிறப்பு போல், சங்கராந்தியில் வருஷப் பிறப்பும் விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது

தானம், தர்மம், தர்ப்பணம் முதலிய நல்ல கர்மாக்களைச் செய்ய உகந்த புண்ணிய காலமாக விளங்குகிறது. பன்னிரெண்டு சங்கரமணமும், தர்ப்பணமும் செய்யாதவர்கள் கூட அன்று தர்ப்பணம் செய்வது மிகவும் விசேஷமாகும்.

மகர சங்கராந்தி என்று சொல்லப்படும் தை வருஷப் பிறப்பன்று, சூரிய பூஜை மிகச் சிறப்பு உடையதாகும்.

தேவேந்திரன் செய்த அபசாரத்தை மன்னித்து, பகவானே இந்திரனைப் பூஜிக்க வேண்டும் என்று அனுக்கிரஹித்ததால் சூரியனை, நாராயணனாகக் கூறி, கருதி, இந்திரனையும், உபேந்திரனையும் சேர்த்து, சங்கராந்தி பூஜை செய்ய வேணடும்.

விஷ்ணு, இந்திரனுக்கு சகோதரனாகப் பிறந்து உபேந்திரன், வாமனன், திரிவிகரமன் என்னும் திருநாமங்களைப் பெற்றான். ஆதலால் அன்றைய தினம், சூரியனை 'இந்திரோபேந்திர சகித சூரிய நாராயணாம் பூஜையாமி' என்று பூஜிக்கவேண்டும்.

தைப பொங்கல் தினத்தை உழவர் திருநாள் என்றும் கொண்டாடுவர்.



ஸ்ரீநஞ்சுகண்டேஸ்வரர் திருக்கோயில்-நஞ்சன்கூடு.

இச்சுபதினத்தில் அனைவரும் புதுத் தொழிலை ஆரம்பிக்கின்றனர். தை மாதத்தில் ஒரு வியாபாரத்தைத் தொடங்கினால் கை நிறைய லாபம் கிடைக்கும் என்பது நாம் பண்டு தொட்டு கண்டறிந்த உண்மை யாகும்.

பொங்கலுக்கு மறுநாள் மாட்டுப் பொங்கல். இந்நாளை பல ஊர் களில் பட்டிப்பொங்கல் என்றும் பட்டி ஆவுடையார் என்றும் இன்றும் கொண்டாடுகின்றனர்.

உழவுக்கும் தொழிலுக்கும் உபயோ கமாக இருப்பது மாடுகள். அதனால் தான் மாட்டுப் பொங்கல் என்று கொண்டாடுகின்றனர்.

மாடுகள் இதிகாச புராண காலம் தொட்டே, ஜீவனத்திற்கு இன்றி யமையாத ஒன்றாக இருந்து வரு கிறது. பசுவைத் தாயாக கொண் டாடுகிறோம். "கோமாதா நம் குலமாதா" என்று பசுவிற்கு பூஜை செய்து வருகிறோம். பசு காமதேனு. காமதேனுவின் உடம்பில் அத்தனை தேவர்களும் தேவதைகளும் குடி யிருக்கின்றனர்.

"பசுக்களைக் காப்பது ஒரு உத்தம மான தர்மம்" என்று வேதம் சொல்லியுள்ளது. ஸ்ரீ மகாலக்ஷ்மியின் முழு சாந்தித்தயமும் பசுவிடம் நிறைந்துள்ளது.

"எல்லா உபநிஷத்துகளுமே பசுக் கள். அதைக் கறக்கும் இடையன் ஸ்ரீகிருஷ்ணன். அப்பசுக்களின் கன்று அர்ஜுனன். கறந்த பால் கீதை. பாலைக் குடிப்பவர்கள் வித்வான்கள்" என்கிறது கீதா மங்களா சாஸனம்.

திருவானைக்கா அகிலாண்டேஸ் வரி ஆலயத்தில் பிரதி தினமும் நடுப் பகலில் கோ பூஜை செய்கின்றனர். அதே போல் ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்தில், முதலில் கோ பூஜையை செய்த பின்னரே, சந்திர மௌளீ சுவர பூஜையை ஆரம்பிப்பர்.

அகில லோகங்களும், முப்பது முக் கோடி தேவர்களும் நிறைந்துள்ள ஸ்வரூபமென தியானித்து கோபூஜை செய்ய வேண்டும். அன்றைய தினம் அருகம்புல்லைப் பசுவிற்குக் கொடுப் பது முப்பத்திரண்டு வகையான தான தருமங்களில் ஒன்றாகக் கருதப்படு கிறது.

மாட்டுப் பொங்கல் அன்று, மாடு களை விதவிதமாக அலங்காரம் செய்து பூஜைகள் நடத்தி வீடுவீடாக அழைத்து வருவர்.

"பொங்கலோ பொங்கல் மாட்டுப் பொங்கல்" என்று எழும் ஓசையும் மாடுகளின் "ஜல்ஜல்" என்ற சலங்கை சத்தமும் கேட்பதற்கு பேரானந்தத் தைக் கொடுக்கும்.

ஆதி காலத்தில் பசுக்களை பண் டம் மாற்றும் முறைக்கு உபயோ கித்து வந்தனர். தசரத சக்கரவர்த்தி பத்து லக்ஷம் பசுக்களை தானமாக அளித்தார் என்று இராமாயணத்தில் கூறப்படுகிறது. சிவபெருமாள் ரிஷப வாகனத்தில் எழுந்தருளி பக்தர் களைக் காத்தருளுகிறார்.

மாட்டுப் பொங்கல் அன்று ஜல்லிக் கட்டு நடைபெறும் இதனை மஞ்சு விரட்டு என்றும் கொல்லேறு தழுவு தல் என்றும் கூறுவர்.

இதற்கும் மறுநாள் கன்னியர் களுக்கு உகந்த நாளான கன்னிப் பொங்கல் கொண்டாடப்படுகிறது. இதனைப் 'பூப்பொங்கல்' என்றும் கூறுவர்.

சங்கராந்திக்கு மறுநாள் வரும் கனுப் பண்டிகை பெண்களுக்கு மிக வும் முக்கியமான பண்டிகையாகும்.

பொங்கல் தினத்தன்று பானை யிலே கட்டியிருந்த மஞ்சளை எடுத் துச் சென்று, வயது முதிர்ந்தவர் களிடம் கொடுத்து நெற்றியிலும், திருமாங்கல்யத்திலும் மும்முறை தேய்த்துக் கொள்வர். அவர்களை நமஸ்கரித்து ஆசி பெறுவர்.

அன்று கனுப்பிடி வைக்க வேண் டும். முதல் நாள் அன்னத்தில் மஞ் சள், குங்குமம் கலந்து தனித்தனி யாக மஞ்சள் சாதம், சிகப்பு சாதம், வெறும் சாதம் என்று உருண்டை யாகப்பிடித்து இலையில் வைத்து கற் பூரம் காண்பித்து நைவேத்யம் செய் வர்.

இத்திருநாளில் பெண்கள் புத் தாடை உடுத்தி நதி தீரத்துக்குச் செல்வர். அங்குக் கூட்டம் கூட்ட மாகக்கூடிக் கும்மி, கோலாட்டம் முத லிய கேளிக்கைகளை நடத்தி ஆனந் திப்பர்.

தை மாதம் ஆரம்பித்து ஏழாம் நாள் கொண்டாடப்படுவது ஏக சப்தமி என்னும் சுக்ல சப்தமி. இந்த சப்த திதியான ஏழாம் நாள்தான் சூரியன் வடக்கு நோக்கி மகர ராசி யில் தமது ரதத்தில் சஞ்சாரத்தைத் தொடங்குகிறார்.

இந்நாளைத்தான் ரத சப்தமி என்றும் மகர சங்கராந்தி என்றும் கூறுகினறனர்.

ரத சப்தமி, ஒரு மிகச் சிறந்த புண் ணிய காலமாகக் கருதப்படுகிறது.

அன்றைய தினம் ஏழு எருக்கை இலை, அட்சதை, பசுஞ்சாணி ஆகிய வற்றைத் தலையில் வைத்து, ஸ்நா னம் செய்ய வேண்டும். இப்புண்ணிய ஸ்நானம் சகல பாபத்தையும் போக்கி புண்ணியத்தை அளிக்கிறது.

இதையடுத்து தை மாதத்தில் வரும் பூச நக்ஷத்திரம் தைப்பூசம் என்று கொண்டாடப்படுகிறது.

இந்தப் புஷ்ய நக்ஷத்திரத்துடன் உதய பௌர்ணமி மிகச் சிறந்த புண் ணிய காலமாகும். அன்றைய தினம் ஒரு கல்பத்தின் உலக சிருஷ்டி ஆரம்பமாகிறது. உலக சிருஷ்டியின் போது பகவான் ஜலத்தையே முத லில் படைத்தான்.

ஜலத்திலிருந்து பிரம்மாண்டம் உண்டானது. இந்த ஐதீகத்திற் காகவே இந்நாளில் பல ஆலயங்களில் தெப்போற்சவத்தைக் கொண்டாடு கின்றனர்.

தை பௌர்ணமியில்தான் தைப் பூச விழா நடைபெறும். இவ்விழா வைக் கொண்டாடுவதன் மூலம் தேவ குருவாகிய வியாழ பகவானை ப்ரீதி செய்வதாகக் கருதப்படுகிறது.

தைப் பூசத்திருவிழா எல்லா சிவன் கோவில்களிலும் மிக்க கோலாகல மாக நடைபெறும்.



# திருவேங்கடம்

முத்தமிழ்க்கவி வீரராகவ முதலியார் அந்தகக்கவி வீரராகவ முதலியாரின் மகள் வயிற்றுப் பேரர். செங்கற்பட்டுக்கு அருகிலுள்ள பொன் விளைந்த களத்தூர் இவர் ஊராகும். இவர் சற்றேறக்குறைய 450 ஆண்டுகட்குமுன் வாழ்ந்தவர். இவர் 'திருவேங்கடக் கலம்பகம்' என்ற ஒரு சிற்றிலக்கியத்தை இயற்றியுள்ளார். இது திருவேங்கட மலை மீதும், அம்மலையின் மீது திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையான் மீதும் காதல் கொண்ட ஆசிரியரின் உள்ளத்தினின்றும் உருக்கொண்டதாகும். ஒரு திருப்பாடலில் தான் திருவேங்கடமுடையானைப் பாடுவதற்குக் காரணம் கூறுவது போல் அமைந்துள்ளது. ஆழ்வார் பெருமக்கள் அனைவரும் 'நாக்கொண்டு மானிடம் பாடாத' புண்ணிய சீலர்கள். இக்காலத்துப் புலவர்கள் போலவே இப்புலவர் பெருமானும் சில்வாழ் பல்பிணிச் சிற்றுயிர்களை ஒரொரு கால் பாடியிருக்கலாம்- அந்த அழுக்கு நாக்கினின்றும் நீங்க திருவேங்கடமுடையானின் திருநாமத்தைப் பாடித் துதிப்பதாகக் கூறுவர்.

பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்
சென்னை-40.



ஆனாத கீர்த்தித் திருவேங்
கடத்துஉறை அச்சுத! நீ
தான்ஆதரிக்கத் துதித்தேன் அல்லேன்
இந்தத் தாரணியின்
மேனாளின் மானிடம் பாடிய
நாச்சுத்தம் மேவுதற்கு
நான் ஆசை யால்துதி செய்தேன் உன்
புண்ணிய நாமத்தையே (99)

[ஆனாத–நீங்காத; கீர்த்தி - புகழ்- ஆதரிக்க-அன்பு வைக்க; தாரணி; பூமி; மேல்நாள்-அனாதிகாலம்; மானிடம்-மனிதர்கள்! நா-நாக்கு; சுத்தம்-மேவுதல்-தூய்மை அடைதல்; ஆசையால்-விருப்பத்தால்]

என்ற பாடலில் இதனைக்காணலாம். இதனால்தான் இவர் பாடிய 'கலம்பக மாலை' "பக்தியின் துதிபாடின மாலை" ஆகின்றது.

இந்த நூலின் இறுதிப் பாடலில் தன்னைத்தொண்டருக்கும் தொண்டராகக் கூறி வைணவ மரபினனாகப் புலப்படுத்திக்கொள்ளுகின்றார்.

கண்ணா யிரமபெற்ற கோன்உல
கோங்கிய கற்பகக்காத்
தண்ணாரும் பூவையும் வேண்டிலம்
வேண்டித் தலைக்கணிபூ
எண்ணார்க் கிருளன்ன வேங்கடத்
தான்தொண்டர் ஏவற்றொழில்
பண்ணாசைத் தொண்டரவர் தொண்டர்
தொண்டர் பதமலரே 100)

[தண் ஆரும்-குளிர்ச்சி நிறை; வேண்டி-விரும்பி; எண்ணார்க்கு-தியானிக்காதவர்களுக்கு; இருள் - அஞ்ஞானம்; தொண்டர் - அடியார்கள்; ஏவல் தொழில்-ஏவிய சிறு தொழில்; பண்-செய்கின்ற; ஆசை-அன்பு; தொண்ட

ரவர்-அடியார்களின்; பதமலர்- திருவடித் தாமரை]

உம்பர் உலகத்துக் கற்பக மலரையும் தான் விரும்பவில்லையென்றும், திருவேங்கடமுடையானின் தொண்டர்களின் திருப்பாத மலரே தாம் விரும்பும் மலர் என்றும் கூறித் தமது ஆழ்ந்த வைணவப் பற்றைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றார். இப் பாடலில், 'கண்ணாயிரம் ... வேண்டிலம்' என்ற பகுதி,

ஆனாத செல்வத்து
அரம்பையர்கள் தற்சூழ
வான் ஆளும் செல்வமும்
மண்ணரசும் யான் வேண்டேன்

—பெரு.திரு. 4:2

என் குலசேகரப் பெருமாளின் திருவாக்கையும்,

பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா, அமரர் ஏறே!
ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகருள் ளானே

—திருமாலை—2

என்ற தொண்டரடிப் பொடிகளின் பாசுரத்தையும் நினைக்கச் செய்கின்றது.

மேலும் இப்பாடலின் 'வேங்கடத்தான் தொண்டர்...பதமலரே' என்ற பகுதி அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபனின்,

நேர்பட்ட நிறைமூ உலகுக்கும்
நாயகன் தன் அடிமை
நேர்பட்ட தொண்டர் தொண்டர்;
தொண்டர்
தொண்டன் சடகோபன்

—திருவாய் 8-9:11

புண்ட ரீகக்கொப் பூழ்ப்புனல்
பள்ளி அப்பனுக்கே
தொண்டர் தொண்டர் தொண்டர்
தொண்டன் சட
கோபன்

—திருவாய் 7-1:11

எந்தைபி ரான் தனக்கு
அடியார் அடியார் தம்அடி
யார்அடி யார்தமக்(கு)
அடியார் அடியார் தம் அடி
யாரடி யோங்களே

—திருவாய் 3.7:10

என்ற திருவாய்மொழிப் பாசுரப் பகுதிகளை நினைவுகூரச் செய்கின்றது. பெரும்பாலும் முத்தமிழ்க் கவிஞர் தம் பாடலாகிய 'குலோப் ஜாமுனை' ஆழவார் பாசுரங்களாகிய 'ஜீராவில்' தோய்த்து தோய்த்தே தருகின்றார் என்பதைக் காணலாம்.

திருவேங்கடத்தின் பெருமை: திருவேங்கடக் கலம்பகத்தில் திருவேங்கடமலையின் பெருமை பல பாசுரங்களில் பேசப்பெறுகின்றது. திருவேங்கடத்தில் பிறத்தலும் இருத்தலும் தனக்குப் போதும் என்று கூறியவர் குலசேகரப் பெருமாள்.

செம்பவள வாயான்
திருவேங் கடமென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல்
ஏதேனும் ஆவேனே

—பெரு.திரு. 4:10

மாடாக நிழற்றுசெழு
மரனாகத் தவச்சிறிய
பூடாகக் குழைத்தநறும்
புதலாக வழிபடுமோர்
ஓடாகப் பெறுவமெனில்
உயிர்காள்! நற்கதி பெறலாம்
வீடாகத் திருநெடுமால்
வீற்றிருக்கும் வேங்கடத்தே (72)

[மாடு-விலங்கு; நிழற்று - நிழல் தரும், பூடு-பூண்டு; புதல்-புதர்; வழிபடும்-வழியில் கிடக்கும்]

என்று பாடுவர். "திருநெடுமால் தனது இருப்பிடமாக உகந்து கொண்டிருக்கும் திருவேங்கடத்தில் விலங்காகவாயினும் நிழலைத் தரும் செழு மரமாகவாயினும் மிகச்சிறிய புல் பூண்டுகளாகவாயினும், தளிர்த்த நல்ல புதராகவாயினும், வழியில் கிடப்பதொரு ஓடாகவாயினும் இருக்கப்பெறுவோமென்றால் நாம் சிறந்த நற்கதி பெறலாம்" என்று சீவர்களை நோக்கிக் கூறுகின்றார் கவிஞர் பெருமான்.

இன்னொரு பாடலில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் சில இடங்களைக் குறிப்பிடும் ஆசிரியர் திருவேங்கடம் என்னும் அழகிய திருமலையையும் அவற்றுள் ஒன்றாகக் குறிப்பிடுவர்.

மாதவத்தோர் சிந்தையுமாம்
மாமறையின் உச்சியுமாம்
கோதகற்று வேங்கடப் பொற்
குன்றமுமாம்; சீதமலர்
எட்டக் கரத்தான்
இடம் திகழ்சங் கோன்குருந்தை
எட்டக் கரத்தான்
இடம் (63)

[மறை-வேதம்; உச்சி-உபநிடதம்: கோது-குற்றம்; சீதம்-குளிர்ச்சி மிக்க; அக்கரம்-அட்சரம்,எழுத்து, குருந்தை-குருந்த மரத்தை; எட்டு அகரத்தான் - அழகிய கைகளை யுடையவன்.]

என்ற பாடலில் இதனைக் கண்டு மகிழலாம்.

பிறிதொரு பாடலில் வேங்கடத்தை வியந்து கூறும் பாங்கில்

ஆலத்து அரங்கத்து ஐவாய்ப் பொறிப்
பாம்பினில் அக்கயிலை
போலத் தரங்கத்தை வீசு
ஆழியில்துயில் புங்கவர்பைங்
கோல்அத்தர் அங்குஅத்தைநன்
மகற்கே
பண்டு கூறும் முத்தி
நூல்அத்தர் அங்கத்தை ஏந்தஎன்
வேங்கடம்நோற் றதுவே (29)

[ஆலத்து-ஆலிலையில்; அரங்கம்; திருவரங்கம்; ஐவாய் - ஐந்துவாய்கள்; பொறி-புள்ளி; தரங்கம்-

அலை; ஆழி-கடல்; புங்கவர்-இள எருது போன்றவர்;பைங்கோல்அத் தர்-பசுமையாக உள்ள கோலைக் கையிலுடையவர்; அத்தை-குந்தி; மகன்—பார்த்தன்; முத்தி நூல் - கீதை; அத்தர்-தலைவர்; அங்கம்-திருமேனி; ஏந்த-தரித்தற்கு]

என்று விளக்குவர். "ஆலிலையி லும் திருவரங்கத்திலும், ஆதிசேட னிடத்தும், திருப்பாற்கடலிலும், அறிதுயில் கொண்டிருக்கின்றவரும், பசுமையான பசுக்களை மேய்க்கும் கோலையுடையவரும், அத்தை மக னான பார்த்தனுக்கு முற்காலத்தில் உபதேசித்தருளிய வீடுபேற்றைத் தர வல்ல கீதையையுடைய தலைவரு மாகிய எம்பிரானது திருமேனியைத் தரித்தற்குத் திருவேங்கடமலை என்ன தவம் செய்ததோ?" என்கின் றார்.

கலம்பலக உறுப்புகளில் ஒன்று ஊர் என்பது. இது பாட்டுடைத் தலை வன் வாழும் ஊர் இன்ன சிறப்பினை யுடையது என்று பாடுவது. இங்குப் பாட்டுடைத் தலைவனாகிய வேங் கடவாணனின் ஊராகிய திருவேங் கடமலையைச் சிறப்பித்துப் பாடும் முகத்தான்,

புவனம் முழுதும்
பணியும் இருசரண
புண்டரிகர் பொறியளிகள்
கிண்டுதுளவார்
அவனிமகள் செங்கமலமகள்
கணவர் தங்குகிரி
அழகு திகழும்
குழையில் வீழ்
குவளை விழியின்
குறவர் மடமகளிர்
செங்கைவிரல் கொளுவிய
கவண்கல் படவே
நவமணம் வழங்குசுர
தருமலர் உதிர்ந்துவிழு
நலமலி புயங்க
கிரியே (22)

[புவனம்-உலகம்; பணியும்-வணங் குகின்ற; சரணம்-திருவடி; புண்ட ரிகம்-தாமரை; பொறி-புள்ளி; அளி-வண்டு; கிண்டு - நெருங்கி; துளவார்-மொய்க்கின்ற; அவனி மகள்-பூமிப்பிராட்டி; செங்கமல மகள்-பெரியபிராட்டியார்; குழை-காதணி; குவளை-நீலோற்பலம்-கொளுவிய - விளையாட்டாக எடுத்து எறிந்த; நவமணம்-புதிய வாசனை; புயங்ககிரி-பாம்புமலை]

என்று கூறுவர். "எல்லா உலகங் களும் வணங்குகின்ற, இரண்டு திரு வடித் தாமரைகளையும், வண்டுகள் மொய்க்கின்ற திருத்துழாய் மாலை யையும் கொண்டு பூமிப் பிராட்டி பெரிய பிராட்டி ஆகிய இருவர் களுடனும் தங்கியிருக்கும் மலையா தெனில்: அழகு தவழுகின்ற காதணி களை எட்டுகின்ற குவளை மலர் போன்ற கண்களையும் இளமையை யும் உடைய குறமகளிர் தம் சிவந்த விரல்களினால் கவண்கற்களை விளை யாட்டாக எடுத்தெறியவே, நவ மணம் கமழும் கற்பக மலர்கள் உதிர்ந்து விழப்பெற்று அழகுமிக்க சேடகிரி (பாம்பு மலை)யேயாகும்" என்கின்றார். வைணவத்தில் திரு மலையைத் திருமலையாழ்வார்என்று வழங்குவர்.

எம்பெருமானின் உடலாகத் திக ழும் 'அசித்தும்' வழிபடுவதற்கு உரி யது என்ற கொள்கையையுடையவர் கள் ஆழ்வார் பெருமக்கள் என்ப தனை நாம் அறிவோம்.

மதிதவழ் குடுமி
மாலிருஞ் சோலை
பதியது ஏத்தி
எழுவது பயனே

(திருவாய் 2-10:2)

என்றும்,

பரன், சென்று சேர்திரு
வேங்கட மாமலை
ஒன்று மேதொழ
நம்வினை ஓயுமே (திரு. 3-3:8)

என்றும்வரும்நம்மாழ்வார்திருவாக்கு களைக் காண்க. இந்தக் கொள்கை யின் அடிப்படையில்தான் முத்தி மிழ்க்கவிஞரும் திருமலையின் பெரு மையினை ஆங்காங்குக் கூறிச்செல்வர்.

திருவேங்கடத்து அப்பனின் சீர்மை :

வேங்கடத்தின் பெருமையை எடுத் தோதிய ஆசிரியர் அம்மலையில் எழுந்தருளியுள்ள வேங்கடவாண னின் சீர்மையையும் விதந்து கூறுகின் றார்.

மொழிமறை முடிமேல்
எழுமுதல் அதுவே
செழுவட மலைவாழ்
விழுமிய பொருளே (76)

[மறைமுடி - உபநிடதம்; முதல் - முதற்பொருள்; விழுமியபொருள்-பரம்பொருள்]

இந்த பாடலால் வேதவிழுப் பொருளே வேங்கடமலையில் எழுந் தருளியிருப்பதாகக் கூறுகின்றார். வடமலைவாழ்தேவருக்கு ஆட்பட் டால் ஏற்படும் பெருமையையும் காண்போம்.

யாவருக் கிந்தப் பெருமையுண்
டோதுக இன்உயிர்காள் !
மாவருக் கைத்திரள் பொற்குடந்
தூங்கும் வடமலைவாழ்
தேவருக் காட்பட்டு வைகுந்த
மேவித் தினமிருப்போர்
பூவருக் கம்பொரு தாள்கீழ்ப்
படும்எப் புவனமுமே (21)

[மா-பெரிய;வருக்கை-பலாப்பழம்; பொன்குடம்-பொன்குடம் போல், தூங்கும்-தொங்கும்; ஆள்பட்டு-அடிமைப்பட்டு; மேவி-அடைந்து; பூவருக்கம்-தாமரைப்பூவின்இனம், பொருதாள் - ஒக்கின்ற திருவடி; படும்-அடையும்]

"ஏழுமலையானுக்கு ஆட்படுபவர் கள் வைகுந்தத்தில் இருப்பார்கள்; எவ்வுலகங்களும் அவர்கள் திருவடிக் குக் கீழ்ப்படும். வேறு எந்தக் கட வுளுக்குத்தான் இந்தப் பெருமை உண்டு?" என்கின்றார் இந்தப் பாட லில்.

தி. தி. தேவஸ்தானத்தாரின

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

**ஆர்ஜித நைவேத்தியங்கள்**

(அ) பொங்கல் ,, ரூ. 110/-
(ஆ) புளியோரை ,, ரூ. 100/-
(இ) தத்யோதனம் ,, ரூ. 75/-
(ஈ) கேஸரிபாத் ,, ரூ. 180/-
(உ) சர்க்கரைப் பொங்கல் ,, ரூ. 135/-
(ஊ) தோசை ,, ரூ. 300/-
(எ) ஸாகரபாத் ,, ரூ. 150/-
(ஏ) ஸீரா ,, ரூ. 300/-

**ஆர்ஜித சேவைகள்**

(அ) திருச்சி உற்சவம் ரூ. 63-00
(ஆ) யானை வாகனம் ரூ. 82-00
(இ) தோலோற்சவம் ரூ. 160/- (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்)
(ஈ) திருப்பாவாடை ரூ. 2000/- (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்)
(அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்)

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

அடுத்து, திருவேங்கடமுடையானின் திருவடிப் பெருமையைக் கூறுகின்றார்:

புயங்கமலை மேல்தொழுத
புண்ணியர்க்கும் உண்டோ
புயங்கமலை மேவும்
பரமன் — வியங்கமல
நேருநாட் டத்தன்
நிலமேல் அமருலகத்
தாருநாட் டத்தன்
சரண் (8)

[புயங்கமலை-சேஷகிரி; பயம்-அச்சம், கமலை-இலக்குமி; பரமன்-சிறந்தவன், மேவும்-பொருந்தியிருக்கும்; வியம்-பெருமையுடைய; கமலம்-தாமரை; நேரும்-ஒத்திருக்கின்ற-நாட்டம்-கண்கள்; நிலம் - பூமி; அமர் உலகம் - தேவர் உலகம்; தாரு-மரம்; அத்தன் - தலைவன்; சரண்-திருவடிகள்]

"அரவக்கிரியில் பொருந்தி வாழும் அச்சுதன் திருவடிகளைத் தொழுது வணங்கின நல்வினைப் பேறுஉடையவர்கட்குப் பிறவித் துன்பங்களாலுண்டாகும் அச்சம் உள்ளதோ?" என்கின்றார் முத்தமிழ்க்கவிஞர்.

நம்மாழ்வார் போன்ற ஞானச் செல்வர்கள் சரண் அடைந்தவை திருவேங்கடமுடையானின் திருவடிகள்; அவற்றை மக்கள்குலம் சரணமாக அடையப்பெற்றால் ஏற்படும் பலனையும் எடுத்துரைக்கின்றார் கவிஞர் பெருமான்.

சரண் மெனத்தன் சரணே
அடைந்த சனர்சனன
மரண மடுத்துவருந் தாதுதன்பதம்
வாழ வைக்கும்
கிரணம் விரிக்குமதி தீண்டும்
சேட கிரியிலம்பொன்
அரணம் உடுத்த திருக்கோயில்
மேவிய அற்புதனே (9)

[சரணம்-அடைக்கலம்; சரண்-திருவடிகள்; சனர்-மக்கள்; சனனம்-பிறப்பு; மரணம்-இறப்பு; அடுத்து-அடைந்து; தன்பதம்-தனது பரம பதம்; கிரணம்-ஒளி; விரிக்கும்-வீசும்; மதி-சந்திரன்; அம்பொன்-அழகிய பொன்; அரணம்-மதில்; உடுத்த-சூழ்ந்துள்ள]

(40-ம் பக்கம் பார்க்க)

திருமாலின் அடி, திருவடியாகும். அடியார்கள் என்பது பரந்தாமன் பாதம்பற்றியேவாழநினைப்பவர்கள். கருணைக் கடலான மாயவன் எளியவர் பாலும் அன்பு செலுத்துபவன்.

நெடியவன் பாதத்தில் அர்ச்சிக்கப் படும் மலர்கள் மணம் பெறும் அதிசயத்தை அறிவீர்களா? மலர்கள் வாடிவிடும் தன்மையுள்ளன. ஆனால் தேவதேவன் மலர்ப்பாதமோ என்றும் புதிதாய், பார்க்கப் பார்க்க இதுவரை நாம் பார்க்காத ஒன்றாய்—பார்த்துக்கொண்டே இருக்கத் தூண்டுவதுதான் பார்த்தசாரதியின் பாத அரவிந்தங்கள். அங்குதான் வேறெங்குமே காணமுடியாத சங்க ரேகையும் சக்ரரேகையும் காணமுடியும். பத்மபாதத்தின் உள்ளங்கால்கள்

# துயரறுசுடரடி

பத்மராகக் கற்களைக் காட்டிலும் சிவந்திருக்குமென்றால் புறங்கால்களோ, இந்த்ர நீலக் கற்களைக் காட்டிலும் கறுத்திருக்கும் — நகங்கள் சந்த்ரகாந்திகளினும் அழகுற்று வெண்மையால் விளங்கும். அந்தப் பாதங்களின் மேன்மைதான் என்ன?

இராமனாக காடு மேடெல்லாம்—கல்முள்ளென்று (இருந்த பாதுகைகளையும் பரதனுக்கு அளித்துவிட்டு) பாராமல் நடந்து—காடுகளை வளமுறச் செய்த அந்தப் பாதங்களில் கல்லினும் கடுமை இருக்கும். தளிர் போன்ற தன் கைகளால் திருமகள் பரிவுடன் அதனை வருடும்பொழுதா அந்த கடுமை நீங்கி மென்மையாகி விடுகின்றன — மலரினும் மென்மை. அந்தப் பாதங்களைச் சரணடையச் சொல்வதுதான் கீதையின் சாராம்சம் ஆகும். இதைத்தான் "மாமேகம் சரணம்வ்ரஜ"என்று கண்ணன் அர்ச்சுனனுக்குத்தெளிவுபடுத்திவிடுகிறான்.

அது நமக்கல்ல என்று இருந்து விடக்கூடாது. அர்ச்சுனனுக்கு என்று சொல்லப்பட்ட கீதை உலகையே வாழ வைக்கிறது. அதுபோல கீதையின் பிழிவான 'என்னைச் சரணடை' என்பதை நமக்கும் சொல்லப்பட்டதாகக் கருதி திருவிக்ரமன் சரணாரவிந்தத்தில் சரணடைந்தால் எல்லா மங்களங்களும் உண்டாகும். இதை உணர்த்துவதற்குத்தான் திருவேங்கடமுடையான் தன் வலது திருக்கையை முன்புறமாகக் கீழ்நோக்கி வைத்துக்கொண்டிருக்கிறான். 'இத்திருவடியே உங்கள் அனைவருக்கும் கதி' என்று சொல்லாமல் சொல்லி விடுகிறான். அதனால் அவன்தாள் தொழுவோம்.

கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழார் எனின்.

அவன் தாளைப் பற்றியிருந்த அர்ச்சுனனுக்கு வெற்றி தந்தான் கண்ணன்! தலைப்பக்கம் இருந்த துரியோதனுக்கு?

அந்தத் தாள்களின் மகிமைதான் என்ன?

கல்லாகக்காலம்கடத்தும் அகலிகை இந்த பவக் கடலைக் கடக்கச் செய்யும் பகலவனாம் திருமாலின் மலர்ப் பாதம் எங்கே எங்கே என்று தினமும் தேடிக் கொண்டிருந்தாளாம். ஸ்ரீராமபிரானின் பாத தூளி பட்ட க்ஷணத்திலேயே அவள் சாப விமோசனம் பெற்றாள். இராமனின் பாதமே அவள்மீது படவில்லை. பாதத்தில் பட்டுத் தெரித்த மண் துகள் ஒன்று அந்தக் கல்லில் பட்டவுடனே அவளுக்குச் சாபவிமோசனம் கிடைத்ததென்றால் "பாதம் பிடித்தோர்க்கும் ஆறுதலைப் பார்"என்று ஒரு புலவர் பாடியதுபோல் நமக்கு ஆறுதல் கிடைக்கத்தானே செய்யும் அளப்பரிய பெரிய உலகத்தையே அந்தத் திருவடிகள் அளந்தன. தன்னைக் கொல்லவந்த சகடாசுரன் விரைந்து அழியுமாறு உதைத்து—காளியன் என்ற பாம்பின் மேல் ஆடிச் செந்நிறம் பெற்ற திருவடிகளாகும் அவை.

"தேடிய அகலிகை சாபம் தீர்த்ததாள்
நீடிய உலகெலாம் அளந்து நீண்ட
தாள்
ஓடிய சகடிற உதைந்து பாம்பின்மே
லாடியும் சிவந்ததாள் என்னை
யாண்டதாள்"

என்று வில்லிபுத்தூரார் ஆழியான் பாதங்களைப் புகழ்ந்து மகிழ்கிறார்.

ஆயர்குலப் பெண்கள் தம்தம் உறியில் வைத்த தயிர், பால் வெண்ணெய் ஆகியன எட்டாததால், உரல் மீது அமர்ந்து ஏறி, இளமையுடைய பெண்களின் எதிரில் பல நடனம் செய்து நந்தகோபனின் இல்லத்தில், யசோதையின் இரு கண்களும் களிக்க

திரு. க. இராமலிங்கம்,
புதுப்பேட்டை.

விளையாடிய கண்ணனின் இரு திருவடிகளை மறவாதிருப்பவரே பிறப்பு இல்லாதவர் ஆவார் என்கிறார் வில்லிபுத்தூரார்.

"துயரறு சுடரடி தொழுதெழென்
மனனே"
"வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே"

என்று நம்மை மட்டும் கோலவில் இராமர் பாதம் பற்றச் சொன்னாரில்லை.

"நாள்தோறும் நாரணன்தன்
வாடாத மலரடிக்கீழ்"

தன்னை வைக்கவும்,

"உன்தேனே மலரும திருப்பாதம்
சேருமாறு விழைவேனே"

என்று அவரும் நரசிங்கம் பாதத்தில் வீழ்ந்து பற்ற முயல்கிறார் நம்மாழ்வார். ஏன்?

காளமேகன்,

'எல்லா அறிவுக்கும திசைகளுக்கும்
தனது
திருவடியால் தாயோன் ஆனான்' என்கிறார்.

நமக்கு அறிவை அளித்தவன் ஆராவமுதன். திசைகளை உண்டாக்கியது செங்கண்மால் திருவடி (அங்கண்மா ஞாலத்தையே அளந்ததுவும் அவனது திருவடியே) 'உண்டாகி' யிருப்பவள் தாய். உண்டாக்கியிருப்பவரும் 'தாய்' தானே. தாய்போல் எல்லாரையும் காக்கும் தயாளனல்லவா கோபாலன்!

இலங்கைக்கோன் தலைகளைத் துணித்தவன் தாள்களில் நாம் விழ்ந்தால் நாம் வாழும் நாட்களைக் கழித்துவிடலாம். இனி காலகாலமாகப் பலபிறவிகளில் வாழவேண்டிய நாட்களில் எண்ணிக்கை குறையும். இனிப் பிறவிஇல்லை என்பது வெளிப்படை.

அதைத்தான் நம்மாழ்வார்,

"வானார் தம்மையாளும் அவனும்
நான்முகனும் சடைமுடிய அண்ணலும்
செம்மையா லவன்பாத பங்கயம்
சிந்தித் தேத்தி திரிவரே"

என்கிறார்.

பெரிய திருவடிகள் அல்லவா அவைகள்? குறளனும் அவனே-உலகை மூவடியால் அளந்த திரிவிக்கிரமனும் அவனே. நீடுறைகின்ற பிரான் நிலந்தாவிய நீள்கழல்களாயிற்றே.

உலகேழும் ஓர் மூவடி கொண்டாரென்றால் அது எவ்வளவு பெரிய சீரடியாக இருக்கவேண்டும்? 'நமக்கு உற்ற துணையும் அதுவே' என்கிறார் நம்மாழ்வார்.

"பிறவியற்று நீள்விசும்பிற் பேரின்ப முய்க்கும்
திறமளிக்குஞ் சிலத் திருமால்-அறவிளியல்
பற்றுவார்க் கென்றுபகர் மாறன் பாதமே
உற்றதுணை"...

ஏனென்றால்,

"பெற்ற அத்தாயாய்த்
தந்தையா யறியாதன அறிவித்த
அத்தனல்லவோ" அவன்.

அதனால் அவன் திருப்பாதத்தை விட்டு அகலமாட்டேன் என்கிறார்.

"பூவார் கழல்கள் அருவினையேன்
பொருந்துமாறு யுணராமே
அடியேன் உன்பாதம்
அகலகில்லேன் இறையுமே"

பக்தி சிரத்தையுடன்,

"ஆடியாடி யகம் கரைந்து இசை
பாடிப்பாடிக் கண்ணீர் மல்கி எங்கும்
நாடிநாடி நரசிங்கா வென்று
வாடியாடு"

என்று நம்மையும் அவன் புகழைப் பாடிப் பரவச் சொல்கிறார். அரவணையில் பள்ளிகொள்வோன் எட்டு திக்குகளுக்கும் நாயகன். அதனால் தான்,

"குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித்
தென்திசை யிலங்கை நோக்கி..."

அரவணையில் துயில்வதிலிருந்தே எட்டுத் திக்குகளும் அவனுக்குச் சொந்தம் என்று நமக்குத் தெரிந்துவிடுகிறதல்லவா. அவன் பாதத்தைப் பற்றத்தான் திருப்பாணாழ்வார்,

"நிமலன் நின்மலன் நீதிவானவன்
நீள் மதிலரங் கத்தம்மான் திருக்
கமல பாதம்வந் தென் கண்ணுள"

என்கிறார்.

அதைத்தான் திருமங்கையாழ்வாரும்

"திருவடி யடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய்"

என்று அவரின் திருவடியில் தஞ்சம் புகுந்துவிடுகிறார். ஏன் தெரியுமா? அவன் அரியவன். 'நீண்டான் குறளாகி நிமிர்ந்தவன் தன்னை உள்ளுவா ருள்ளத்தே யுறைகின்ற அவனைப் பேசா நாளெல்லாம் பிறவா நாள்' என்பதால்தான், அப்படி மனத்துள் வந்து புகுந்தவனை "போகவிட மாட்டேன்" என்று மனத்தைவிட்டு அகலவிடாமல் சிக்கெனப் பிடித்துக்கொள்ள வேண்டாமோ?

அதனைத்தான் தொண்டரடிப் பொடியாழ்வார்,

"அவனல்லால் தெய்வமில்லை
கன்றினை மேய்த்த யெந்தை
கழலினை பணிமினீரே" என்றும்
"மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர்"

என்றும் வைகுந்தவாசனின் பாதங்களைப் பணியச் சொல்லும் அவர், மாதவன் பாதங்களை மறக்க முடியாத காரணத்தையும் சொல்கிறார்.

"நீள் மன்னு சேவடிக்கே மறவாமை
வைத்தாயால்"

கருட வாகனன் பாதங்களை அவரால் மறக்க முடியாதாம். நம்மையும் மறக்க வேண்டாம் என்கிறார்.

"படங்கொண்ட பாம்பணைப் பற்றி
கொண்டான் திருப் பாதங்களை"

எண்ணினால் நம் வினைகடிவான்என்கிறார். நம்மாழ்வார்நம்வினைகளைக் கடிந்துவிடுவதால் நினைக்கச் சொல்லும் அவர், அடுத்து "அல்லல் நில்லாவே" என்றும் சொல்கிறார். நமக்கு வரும் துன்பங்கள் யாவும் நீங்கிவிடும். அவ்வளவுதானா? அதற்கும் மேலேயும் இருக்கிறது.

"உன்னை யென் மனத்து வைத்துப்
பெற்றேன், பெற்றதுவும் பிறவாமை"

இனிப் பிறவியே வேண்டாம் என்பதை ஹயக்ரீவனை வேண்டிப் பெறுகிறோம். ஆகவே, வராகன் "திருவடியே துணையல்லால்" வேறு துணையில்லை. அவனுக்குத்தான் தாய்ப்பாலும் தெரியும் மாய்ப்பாலும் தெரியும். பேய்ச்சியின் முலையுண்ணக் கொடுக்க அவள் ஆவியுண்ட கதை அறியீரோ? சகடம்

உதைத்தவன் நம் சங்கடங்களையும் உதைக்க மாட்டானா, என்ன? அதனால்தான், திருமங்கையாழ்வார், ஆலிலைப் பள்ளிகொண்டான் திரு வடியை அவரின் தலையில் வைக்கச் சொல்லி இறைஞ்சுகிறார்.

ஆனால் பொய்கையாழ்வார் கத்தும் கடலைக் கண்டே வணங்குவார்.

"கடலே, திருமேனித் தீண்டல் பெற்று
என்ன பாக்கியம் செய்தாயோ"

என்று வியந்து வணங்குகிறார். பாற் கடலில் பள்ளிகொண்டோனைத் தீண்டும் பாக்கியம் பெற்றுள்ளதாம் அந்தக் கடல். ஆனால் வில்லிபுத்தூரார் ஆதிசேடனை வியக்கிறார்!

"கோயில் ஆளுடைய பைங் கொண்ட
லார் கண்துயில்
பாயலாய் வாழநீ பாக்கியம் செய்தது
என்"

அந்தப் பெருமைகள் நிறைந்த பாதங்களை வானவரே தினமும் ஏத்தும்போது நமக்கு அருமருந்தாம் அந்த மதுசூதனன் பாதங்களைச் சிந்திக்காமல் இருக்கலாமா? சிந்தித்தால் சித்திக்கும் எல்லாமே. தாசரதி பூப்போன்றவன். அவனே தாமரையானவன்.

"கண்ணுங் கமலம் கமலமே கைத்
தலமும்
மண்ணளந்த பாதம் மற்றவையே"

சௌரிராஜன் மனத்தில் மலர் மங்கை இருப்பதால் மனமும் மலரே. அதனால்தான் நாம் நினைத்தது நமக்குக் கிடைக்கிறது அவனருளால்.

"உண்ணும்சோறு பருகும் நீர்
தின்னும் வெற்றிலையும் எல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்று
என்றே"

நினைக்கிறார் ஆழ்வார். எனவே இரவும் பகலும் அவனையே நினைக்க வேண்டும்.

"பங்கய மலர்கள் இரவும் நண்பகலும்
பணிந்து பாடுதும் அவன் புகழே"

என்று "முத்தி தருகைக்கு குருவான" அவன் பாதத்தை நினைக்கும்படி வில்லிபுத்தூரார் வலியுறுத்தி "திரு மாலை யல்லாது வல்லார்கள் யார்?" என்று நம்மிடம் கேள்வியும் கேட்கிறார்.

நாம் மதுசூதனன் பாதங்களைப் பற்ற ஏன் நினைக்கிறோம்? அவனே தான் நினைக்கிறான்.

"இறைவனானவன் உடல்,அவ்வுடலில்உள்ள ஐம்பொறிகளின் உணர்வு, அந்த உணர்வுக்கு இடமான மனம் என்ற இவற்றின் வடிவாய் எல்லா இடங்களிலும் பரந்து நின்று, திரும்பவும் உயிரும் தூய மூலப் பிரகிருதியுமாய், அந்த அந்த இடங்களில் பிரிந்து, கல்பந்தோறும் மாறிமாறி வருபவன் - சிறந்த பேரறிவு வடிவினன், மற்றஇன்பங்கள் எல்லாவற்றையும்விட பேரின்ப வடிவினன். அவன் அரங்கனல்லாமல் வேறு யாராக இருக்க முடியும்? வாழ்க்கைத் தத்துவமே திருமால்தானே. அதனால் தான் தன்னை ஆட்கொண்டு அருள் பாலிக்குமாறு வில்லிபுத்தூரார் விழைகிறார்.

பல்வகை உயிர்க் கூட்டங்களைப் படைக்கும் நான்முகன், முனிவர்கள், வானவர், நான்கு மறைகளும் அவன் திருவடிகளைப் பரவுகின்றன. நாமும் அவன் பாதங்களைப் பெறலாம். அதற்கு சுலபமான வழி என்ன? பன்னிரு பெயர்களைச் சொன்னாலே போதும். பன்னிரு பெயர்கள் எவை தெரியுமா? கேசவன், நாராயணன். மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், இருடீகேசன், பதுமநாயன், தாமோதரன். இந்த பன்னிரண்டு பெயர்களைக்கூறி உடலில் பன்னிரு இடங்களில் திருமண் அணிந்து கொண்டால் போதுமாம்.

ஆனால் தந்தையால் மகனுக்கு ஏற்பட்ட பெருந் துன்பங்கள் யாவற்றையும் நீக்கியது இந்த பன்னிரெண்டு திருப்பெயர்கள் இல்லை. எட்டு எழுத்துடன் கூடிய ஒரே ஒரு பெயர் தான். மறைகள் உரைத்த பொருள்களையெல்லாம் விளங்கத் தெரிவிக்கும் திருப்பெயர். திருமங்கையாழ்வார் கண்டுகொண்ட திருப்பெயர், 'ஓம் நமோ நாராயணா'. அந்த ஒரு நாமம் சொன்னதாலே பிரகலாதனுக்கு வந்த பெருந்துன்பம் நீங்கியது.

"பிளந்தது தூணும் ஆங்கே
பிறந்தது சீயம் - பின்னை
வளர்ந்தது திசைகள் எங்கும்
பகிரண்டம் முதல் மற்றும்
அறந்தது அப்புறத்துச் செய்கை
யார் அறிந்து அறையகிற்பார்
கிளர்ந்தது ககன முட்டை
கிழிந்தது மேலும் கீழும்"

அங்கே பிரகலாதன் பக்தி வென்று விட்டதை அறிகிறோம்.

அதனால் அவன் பாதங்களைச் சரணடைந்தால் போதும். நம் அல்லல் களையும் - நன்மை கிட்டும்.

ஐந்து வீரர்கள் எதிரில் இருந்தும் தன் மானம் காப்பாற்றப்படாத நிலையில் இந்த சதியிலிருந்து மீள, இனி அவனன்றி கதியில்லை என்று உணர்ந்த பாஞ்சாலி, தன் இருகைகளையும் கூப்பி கிருஷ்ண பரமாத்மாவை வேண்டிய அந்த நிமிஷமே அவளது மானம் காப்பாற்றப்படுகிறது.

"ஆறாகி இருதடங்கண் அஞ்சன
வெம்புனல்சோர அளகம் கைசோர
வேறான துகில் தகைந்த கைசோர
மெய்சோர வேறுஓர் சொல்லும்
கூறாமல் 'கோவிந்தா-கோவிந்தா'
என்று
அரற்றி குளிர்ந்து நாவில்

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (அச்சில்) (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 9. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 10. | மூக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |
| 11. | திருப்பாவை (அச்சில்) | |

## ஸம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. வே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 80—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

ஊறாத அமிழ்து ஊற உடல் புளகித்து
உள்ள மெல்லாம் உருகினாளே"

அப்படி உருகிய திரௌபதியின் பக்தி வென்றது. அவளது மானம் காக்கப்பட்டது கண்ணனால்.

சரணடைந்தால் - 'அவனே கதி' என்று எண்ணினால் போதும், நம் விதியை அவன் மாற்றிவிடுவான்.

முதலை வாய்ப்பட்ட கஜேந்திரன், 'ஆதிமூலமே' 'நாராயணா' என்று ஓலமிட்டவுடன் நேரில் காட்சி கொடுத்து முதலையை வதம் செய்த தோடு கஜேந்திரனுக்கும் திருக்காட்சி யளிக்கிறார்.

இதிலிருந்து நாம் ஒன்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். கோவர்த்தனுக்கு 'உடன் பழகுவோர், உயர்ந்த மனித இனம், தாழ்ந்த பிறவி' என்ற பாகுபாடு இல்லை. உண்மையான பக்திக்கு முக்தி யளிப்பவன்தான் பக்தவத்சலன்.

மும்மூர்த்திகளில் ஒருவரான சிவனாரின் வேண்டுகோளுக்காக 'மோகினி' அவதாரம் எடுத்தவர், மனித அர்ச்சுனனுக்காக 'பார்த்த சாரதி'யாகி தேரை ஓட்டினார்.

எனவே சாரநாதன் சீரடி பற்றுவோம்- அவன் வினைகளை வேறோடு களைவான். சக்கரபாணி நமக்கு அருள்புரிவது திண்ணம்.







# பாஞ்சசன்யம்

திருமாலின் பஞ்சாயுதங்களில் பாஞ்சசன்யமும் ஒன்று என்பதை நாம் நன்கறிவோம். காண்போர் உள்ளத்தையெல்லாம் குளிரச் செய்யும் எம்பெருமான் திருமேனியோ கார் வண்ணம். உள்ளிருக்கும் வாத்ஸல்யம் எல்லாம் தோற்றும்படி செந்தாமரைப் போன்று சிவந்த கண்கள். மென்னகை பூத்திடும் செவ்விய அதரங்கள். இவ்வாறொத்த அழகனுக்கு வர்ணச் சேர்த்தியழகை ஊட்டும் வண்ணம் அமைந்தது அவன் திருக்கரத்திலே ஏந்தியிருக்கும் பாஞ்சசன்யாழ்வானின வெண்மை நிறம். பால்போல் குளிர்ந்த ஒளியைப் பரப்பிக் கொண்டு வானத்தே பவனி வரும் பூரண சந்திரன் போல் மதுரை மன்னனாகிய வாசுதேவன் திருக்கரத்திலே ஏறியமர்ந்திருக்கும் அவன் இருப்பு! அனுபவிக்க யனுபவிக்கத் தெவிட்டாத ஆனந்தத்தையளிக்கும் அவ்வாராவமுதனிடம் ஆராக்காதல் கொண்டவள் ஆண்டாள். அவனை ஒரு கணமும் விட்டகலாது என்றும் இன்பமனுபவித்திடும் பாஞ்சசன் யாழ்வானைக் கண்டு அவனைக் கொண்டே அவ்வாராவமுதனை யடைய விரும்புகிறாள். நாமும் அவ்வாறே அவ்வாராவமுதத்தினை ஆழ்வார்களருளிய அமுதப் பாசுரங்கள் கொண்டும் நம் பூர்வாசார்யர்களருளிய அருமையான வியாக்யானமும் கொண்டும் அனுபவிப்போம்.

இப்பாஞ்சசன்யாழ்வானின் பிறப்பைப்பற்றி முன்னர் தெரிந்து கொள்வோம். "முந்நூ நூலும் முப்புரி நூலும் முன்னீந்த அந்தணாளன்" (பெரிய திருமொழி 6-5-7) என க்ஷத்திரியனாகப் பிறந்த கண்ணன் வேதாப்யாசத்திற்கு முன் சாந்தீபினியென்னும் மறையோனிடம் உபநயனம் செய்து கொண்டான். பின்னர் அவரிடமே வேத சாஸ்த்திரங்களையும் கற்றுணர்ந்தான். மற்ற சிஷ்யர்கள் போன்று தானும் குரு தக்ஷிணை கொடுக்க விரும்பினான். "மறிகடல் வாய் மாண்டானை ஓதுவித்ந தக்கணையா உருவுருவே கொடுத்தான்" (4-8-1 பெரியாழ்.திருமொழி) என்றவாறு ஆசாரியன் விரும்பியவாறேஎன்றோ கடலில் மூழ்கியிறந்த அவர் தம் மைந்தனை மீட்டுக்கொடுக்க முனைந்தான். கடலையடைந்த கண்ணன், 'சங்குருக்கொண்ட பாஞ்சசனன் என்னும் அசுரன் அம்மைந்தனை விழுங்கி விட்டான்' என்பதை வருணன் மூலம் அறிந்து கொண்டான். கடலில் குதித்த கண்ணனும் அவ்வசுரனுடன் போரிட்டு அவனைக் கொன்றான். அவன் உடலாகிய பாஞ்சசன்யத்தை யெடுத்துக் கொண்டு, அத்தால் பெரு முழக்கம் செய்து கொண்டே யமபட்டணத்தை யடைந்தான். மிக்க வேதனைப் பட்டுக் கொண்டு அங்கே கிடந்த மறையோனின் மைந்தனை முன்புள்ள தேகத்தோடு மீட்டுக்கொண்டு வந்து ஆசாரியனிடம் சேர்ப்பித்தான்.

திரு. வி. ராகவன்-பள்ளத்தூர்.

பிறவி யெடுத்தது திருமாலிடம் பகைமை பாராட்டவே என்னும் தன் மையுடையவர்களன்றோ அசுரர்கள்! இதற்கு விதிவிலக்கின்றி பாஞ்சசன னும் கண்ணனுக்கு விரோதியானான். தவித்தவர் விடாய் தீர்க்கவும் உப யோகப்படாத உப்பு நீர்க்கடலே இவன் தன்மைக் கேற்ப இவன் வாழு மிடமாகவமைந்தது. பார்த்தாலே அச்சங்கொள்ளும்படியான பாஞ்ச சனனின் உடலாகவமைந்தது இப் பாஞ்சசன்யமாகிற சங்கு. "கடலில் பிறந்து கருதாது பாஞ்சசனன் உட லில் வளர்ந்து போய் ஊழியான் கைத்திடரில் குடியேறி" (நாச்சி. திருமொழி 7-2) என ஊழிக்கால பிரளயத்தில் மூழ்கியழியவிருந்த இப் பாரினை விழுங்கித் தன் வயிற்றில் வைத்துக் காப்பாற்றிய "ஊழி முதல் வன்" திருக்கரத்தில் ஏறியமர்ந்திருக் கும் பேறு பெற்றிருக்கிறது இப் பாஞ்சசன்யம்.

காலயவநன் என்பானொருவன் தன் தோள் வலியில் செருக்குற்று, 'இப்பாரினில் தனக்குச் சமதை யானோர் யாரேனும் உளரோ?' வென பெரு முழக்கமிட்டுத் திரிந் தான். 'மதுரையிலுள்ள யாதவர் கள் வலி மிக்கவர்கள்' என்பதை நாரதர் வாயிலாக அறிந்தான். உடன் அவனும் அவர்களுக்குத் தீராத் தொல்லை கொடுக்கவாரம்பித் தான். ஜராசந்தன் என்பானும் போதாக்குறைக்குத் தொல்லை கொடுத்தான். குழந்தையில்லா மகத நாட்டு மன்னன் 'ப்ருஹத்ருதன்' கௌசிகனென்னும்மாமுனி கொடுத்த ஒரு மாங்கனியைத் தன் கண்ணே போன்று நேசிக்கும் இரு மனைவி யருக்கும் சமமாக இரு துண்டாக்கிக் கொடுத்தான். அதனால் அவர்கள் பெற்ற பிள்ளையும் ஒரு கண், ஒரு காது, ஒரு கால், ஓர் கையுடன் சரி பாதி உடம்போடு கூடிய மாமிச பிண்டங்களைப் பெற்றனர். குப்பை யில் போடப்பட்ட இவ்வதிசய மாமிச பிண்டங்களைக் கண்ட ஓர் அரக்கி இவற்றையெடுத்துத் தலை யோடு தலை ஒட்ட பூரணக் குழந் தையாய் உயிர் பெற்றது. இவ்வாறு பிறந்தவனே ஜராசந்தன் என்பான். இவர்களின் தொல்லையினின்றும் தன் குடி மக்களைக் காப்பாற்ற மேற்குக் கடலில் 'துவாரகை' என் னும் ஓர் நகரை நிர்மாணித்து, அங்கே அவர்களைக்குடியேற்றிக் காப் பாற்றினான் கண்ணன். உப்புக் கடலையே அரணாகக் கொண்டு தன் குடிகளையெல்லாம் காப்பாற்றிய கண்ணன் கைத்தலத்திலல்லவா ஏறிய மர்ந்திருக்கும் பேறு கிடைத்திருக் கிறது, உப்புக் கடலில் தோன்றி பயங்கரமான பாஞ்சசனன் உடலாக வமைந்த பாஞ்சன்யாழ்வானுக்கு.

கண்ணன் புரிந்திட்ட தீம்புகளுக் குத் தண்டனையாகத் தாம்பு கொண்டு உதரத்தே கட்டியடித்தாள் யசோதை. தாயும் தன்னை அவ் வாறு கட்டியடிக்கலாம்படி தன்னைத் தாழ்த்திக் கொண்டு கிடந்தான். அதனால் ஏற்பட்ட தழும்பு 'தாமோ தரன்' என்னும் சிறப்புத் திருநாமத் தைக் கொள்ளும்படியாயமைந்த தோடு அவன் எளிமையையும் எடுத் துக் காட்டும் வண்ணம் அமைந்தது. அச்சங்கொள்ளும்படியான பாஞ்ச சனன் உடலாகிய தான் கண்ணன் திருக்கரத்திலே ஏறியமர்ந்திருக்கும் இருப்பாலே தானும் அடியார் களுக்குப் பவ்யனானவன் என்பதைப் பறைசாற்றுவதுபோல் ஆயிற்று.

அசோக வனத்திலே சிறைப்பட்டுத் தன் நாயகனான இராமனை நினைந் துருகிக் கிடக்கும் சீதை முன்னே 'இது இராமனின் சிரசு' என மயங்கு மாறு ஓர் சிரசை இராவணன் கொண்டு வந்து காட்டுகையில் கடலைத் தாண்டி இலங்கைக் கரையையடைந்த இராமனின் சார்ங் கமென்னும் வில் நாணினின்றும் எழுந்தவொலி அவளை உயிர் தரிக் கச் செய்தது. அதுபோன்றே இப் பாஞ்ச சன்யத்தினின்றும் எழுந்த வொலி ருக்மிணியையும் உயிர் தரிக்கச் செய்தது! லக்ஷ்மிதேவியின் அம்சமான ருக்மிணி பீஷ்மகன் என

னும் அர்சனின் குமாரத்தியாவாள். கண்ணனோ இவளைத் தனக்கு விவாஹம் செய்து கொடுக்கும்படி வேண்டினான். ஆயினும் இவள் உடன் பிறந்தானாகிய ருக்மி என்பான் இவளை சேதி தேசத்தரசனான சிசுபாலனுக்கு மண முடித்துக் கொடுக்க விரும்பினான். சுயம்வரம் என்னும் சாக்கில் கண்ணனைத் தவிர்த்து மற்ற தேசத்தரசர்கள் அனைவரையும் வரவழைத்தான். தன் காதலனான கண்ணன் சுயம்வரத்திற்கு வராதது கண்டு மனமுடைந்து தன் பிராணனைப் போக்கிக் கொள்ள முனைந்தாள். கண்ணனோ முதல் நாள் இரவே தன் அண்ணன் பலராமனுடன் அப்பட்டணப் புறச்சோலை ஒன்றிலே வந்து தங்கியிருந்தான். பாஞ்சசன்யத்தை "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி" (நாச்சி. திருமொ. 9-9) என்றவாறு தன் அழகிய திருப்பவளத்தே வைத்து ஊதினான். அதினின்றும் எழுந்த வொலி 'உன் காதலன் வந்துவிட்டான்', 'கண்ணன் வந்துவிட்டான்', 'உன்னை மணந்து கொள்வான்', 'உன் முயற்சியைக் கைவிடு' என்னும் இன்பம் பயக்கும் சொல்லை ஏந்தி வருவதுபோல் அவள் காதில் தேனாய்ப் பாய்ந்தது. உடனே பிராணத்தியாகம் செய்து கொள்ளும் தன் முயற்சியினின்றும் மீண்டாள்.

நகர சோதனைக்காக மாறுவேடம் பூண்டு நகர் வலம் வருவர் அக்கால மன்னர்கள். கூப்பிட்ட குரலுக்கு முன் வருமாறு அந்தரங்க சேவகர்கள் மறைந்திருந்து பின் செல்வர்கள். அது போன்று திருமால் தங்களுக்குச் சேவை சாதிப்பதை ஒருக்காலும் விரும்பார்கள் ஆழ்வார்கள். "கூராராழி வெண் சங்கேந்தி வாராய்" (திருவாய் 6-9-1) என சங்கு சக்கரக் கையனாய் அணிகலன்களனைத்தும் பூண்டு திவ்ய திருமேனியனாகத் தோன்றுவதையே பிரார்த்திப்பார்கள் சங்கு சக்கரக்கையனாய்த் தோன்றிய கண்ணனைக் கண்டு, தேவகி 'இக்கோலத்தினை மறைத்துக்கொள். சாதாரணக் குழந்தையாய்த் தோன்றுவாய்' எனக்கேட்டுக் கொண்டாள். ஸ்ரீமந் நாராயணனே தனக்குக் குழந்தையாகத் தோன்றியிருக்கிறான் என்பதில் அவளுக்கு மகிழ்ச்சியேயாயினும் கம்சனால் இக் குழந்தைக்கு என்ன ஆபத்து வருமோவெனப் பிரேமம் காரணமாகவேற்பட்ட அச்சத்தால் இவ்வாறு பிரார்த்தித்தாள். அடியார்களின் விருப்பங்களை நிறைவேற்றி வைப்பதில் முதல்வனான கண்ணன் சங்கு சக்கரங்களை மறைந்திருக்கும்படி செய்து கொண்டான். செய்த தீம்புகளுக்குத் தண்டனையாகத் தாம்பால் உரலோடு கட்டுண்டதான். உரலையும் இழுத்துக் கொண்டு அன்றுதான் 'தவழ் நடை' பயிலுபவன்போல் தெரு நடுவே வந்து விட்டான். ஒன்றை ஒன்று கட்டித் தழுவுவது போல் ஒரு சிறு இடைவெளியோடு இருமருத மரங்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. சுவற்றிலே ஓர் சிறிய துவாரத்தைக் காணில் தன் பிஞ்சு விரலைவிட்டு துழாவும் குழந்தை போல் தானும் அவ்விடைவெளியே புகுந்து வெளியே வந்து விட்டான். ஐயோ! அவ்வுரல் வெளி வர முடியாது அவ்விடை வெளியில் மாட்டிக் கொண்டது. கண்ணன் தன் பலம் கொண்டு இழுக்க அம்மரங்கள் சடசடவென பெருஞ் சப்தத்தோடு முறிந்து விழுந்தன. அப்பேரொலி கேட்டு அக்கம் பக்கத்திலுள்ளார் மிக்க பீதியோடு என்னமோ ஏதோ வென்று அவ்விடத்தில் குழுமினர். கண்ணனோ யாதுமறியாதவன்போல் முறிந்து விழும் அம்மரங்களைப் பார்த்துச்சிரித்துக்கொண்டிருந்தான். 'ஐயோ! என்ன காரியம் செய்தோம். ஓர் ஆபத்தல்லவா இப்போது நிகழவிருந்தது. தேவகிப் பிராட்டி கேட்டுக் கொண்டதாலல்லவோ நாம் ஒதுங்கியிருக்க வேண்டி வந்தது. இனி எக்காரணம் கொண்டும் திருமாலின் திருக்கரம்விட்டு அகலுவதில்லை' யென சங்காழ்வானும் சக்கரத்தாழ்வானும் உறுதி கொண்டனராம்.

"நின்ற புனர் மருதம் சாய்த் தீர்த்தான் கைத்தலத்தே ஏறிக்குடி கொண்டு" (நாச்சி. திருமொழி 7-6) என்றவாறு இரு மருத மரங்களையும் சாய்த்த கண்ணனின் திருக்கரத்திலே ஏறியமர்ந்திருப்பது இவ்வினிய கருத்தினைத் தொனிக்கும் வண்ணம் ஆண்டாள் அருளியிருப்பது நம்மையெல்லாம் பரவசத்திலாழ்த்துகிறது.

'அகலகில்லேன்' என என்றும் அவனைவிட்டுப் பிரியாத அவன் திவ்ய மகிஷிமார்களுக்கும் என்றேனும்தான் அவனுடன் கூடி மகிழும் பேறு கிட்டும். சங்காழ்வானைப் போலவே சக்கரத்தாழ்வானும் எப்பொழுதும் கைத்தலத்தே ஏறியமர்ந்திருக்கும் பேறு பெற்ற போதிலும் "கைந்நின்ற சக்கரத்தன் கருதுமிடம் பொருது" (திருவாய். 10-6-8) என்றவாறு எம்பெருமானின் கருத்தறிந்து செயல்படும் சக்கரத்தாழ்வான் ஒரு காரியம் என்று வருமேயாயின் அதனை முடித்துத் திரும்பும் வரை அவனைவிட்டுப் பிரிந்திருக்க வேண்டி வரும். சங்காழ்வானோ கையைவிட்டால் அவன் வாயை யணைந்து வாயமுதத்தைப் பருகிக் கொண்டிருப்பான்! பாலூட்டித் தன் குழந்தையைத் தோளிலே போட்டுத் தூங்க வைக்கும் தாயைப் போலல்லவா இவனும் சங்காழ்வானுக்குத் தன் வாயமுதத்தை யூட்டித் தன் தோளிலே கிடத்தி அவன் களைப்பையெல்லாம் ஆற்றுவது போலே ஏந்தியிருக்கிறான்.

இரணியகசிபு நீண்ட கடுந்தவத்தால் 'தேவனாலும் மனிதனாலும், மிருகத்தாலும், ஆயுதத்தாலும் தனக்குச் சாவில்லை' என்னும் வரங்களைப் பெற்ற மமதையால் தானே 'பரம்பொருள்' என்று பிதற்றிக் கொண்டு திரிந்தான். திருமாலே பரம்பொருள் என அவனது திருவடி தொழும், பரமபக்தனான தன் மைந்தனான பிரகலாதனுக்கு அவன் இழைத்த கொடுமைகள் ஏராளம். தன் பால் பல அபசாரங்கள் செய்

திடீனும் பொறுக்குமவன் தன் அடியார்கள் திறத்தில் செய்யும் குற்றங்களைச் சகியான். ஆகவே திருமால் சீறியெழுந்தான் நரசிம்மனாய் அவனைத் தொலைத்திட. அவன் பெற்ற வரங்களுக்குக் குந்தகம் நேரா வண்ணம் அவனை ஒழித்திடத் தானே சேராச் சேர்த்தியாக நரனும் சிம்மமுமாய் தன் கூரிய நகத்தால் கிழித்துப் போடத் தோன்றினான் திருமால். நித்திய சூரிகள் எனப்படும் வானோர்கள் திருமாலின் சர்வ வல்லமையையும் சக்தியையும் அறிந்தவர்களேயாயினும் அவனிடம் கொண்ட பிரேமத்தின் காரணமாக அவனுக்கு என்ன தீங்கு நேருமோவென அச்சம் கொள்ளுவார்கள். அதனைத் தடுக்கவும் முயலுவார்கள். சங்கராழ்வானும் இதற்கு விதிவிலக்கல்லவே. "புரியொரு கைபற்றி ஓர் பொன்னாழியேந்தி அரியுருவும் ஆளுருவும்" (முதல் திருவந். 31) என்றவாறு இரணியனைக் கொல்ல முயலும் சங்காழ்வானைக் கண்டு, 'தான் இரணியனைக் கொல்வதற்கு முன்னால் சங்காழ்வான் முந்திக் கொண்டால் ஆயுதத்தால் தனக்குச் சாவில்லை என்று அவன் பெற்ற வரம் பொய்யாகுமே என எண்ணி ஒரு கையால் சங்காழ்வானை நகர முடியாது இறுகப் பிடித்துக் கொண்டும் மற்றோர் கரத்தில் சக்கரத்தாழ்வானை ஏந்திக் கொண்டுமிருப்பதாகப் பொய்கையாழ்வார் அருளியிருப்பது மிக வினிமையாக விருக்கிறது.

விரித்த கூந்தலைக் காணச்சகியாத கண்ணன் திரௌபதியின் மங்கள சூத்திரமற்ற வெறுங்கழுத்தைக் காணச் சகிப்பனோ? ஆகவே பாரதப் போரில் பாண்டவர்களுக்கு உறு துணையாய் இருந்து தேரோட்டியாய் இழி தொழிலையும் ஏற்றுக் கொண்டான்.

"மயங்க வலம்புரி வாய் வைத்து" (முதல் திருவந். 8) என்றவாறு கண்ணன் பாஞ்ச சன்யத்தை வாய் வைத்து ஊதினான். இதினின்றும் எழுந்தவொலி அன்பின் மிகுதியால் பாண்டவர் பக்கமுள்ளோர் 'கண்ணன் நம் பக்கம் உள்ளான், நமக்கே வெற்றி' என்னும் எண்ணத்தை உறுதிப்படுத்தும் வண்ணம் செய்தது. துரியோதனன் பக்கம் உள்ளோர், 'பெரும் படையுள்ள நமக்கே வெற்றி' என்னும் நம்பிக்கை தளரும்படி மயங்கச் செய்தது. ஆக இரு பக்கமும் இவ்வாறு மயக்கத்தையுண்டாக்கியது.

"அக்கடிய பேரரவமந்தன் சுதரிதயஞ்
சிக்கெனத் தீரச் சிதைத்ததே"

(பகவத் கீதை வெண்பா 1-17) என பாஞ்ச சன்யத்தினின்றும் எழுந்த அப்பேரொலி விண்ணையும்மண்ணையும் எதிரொலித்தது. புறக்கண் மட்டுமின்றி அகக்கண்ணும் குருடான திருதராஷ்டிரனின் குமாரர்களின் நெஞ்சைப் பிளந்தது. இவ்வாறு சங்காழ்வான் தன் பேரொலியால் கௌரவர்களின் நெஞ்சை முன்னதாகப் பிளந்தான். கண்ணன் அவர்களைப் பின்னரே கொன்றான்!

ஓர் சங்கொலி இவ்வாறு செய்ய வல்லமை யுண்டோவென மயங்குபவர்கள் 'நகர எல்லைக்குள் காற்று ஒலிப்பான்' (Air Horn) உபயோகிக்கக் கூடாது என்றும் 'காற்று ஒலிப்பான்' தடை செய்யப்பட்டுள்ளது என்றும் அறிவிப்புக்களைப் பார்த்திருப்பார்கள். இதனின்றும் எழும் ஒலியால் நிகழும் சாலை விபத்துக்கள் ஏராளம். நம் செவியின் கேட்கும் திறன் 40 டெஸிபல் என்றும் இதற்கு மேற்பட்டால் கேட்கும் திறன் பாதிக்கப்படுவதோடு இதயமும் பாதிக்கப்படுகிறது என்றும் கூறப்படுகிறது. சுமார் 20 மீட்டர் தூரதில் காற்று ஒலிப்பான் எழுப்பும் ஒலி 90 டெஸிபல் என்றும், 10 மீட்டர் தூரத்தில் 105 டெஸிபல் ஒலியென்றும் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆக இவை எழுப்பும் பேரொலியால் நிகழும் சாலை விபத்துக்களைத் தவிர்க்கவே இவ்வெச்சரிக்கை. ஓர் காற்றொலிப்பான் இவ்வளவு செய்ய முடியுமாயின் சர்வ வல்லமை படைத்தவன் ஊதிய சங்கின் ஒலி எத்தகையதாயிருக்கும்!

"கூடியிருந்து குளிர்ந்து" (திருப்பாவை 27) என எல்லோரும் கூடியிருந்து அனுபவிக்க வேண்டியதைத் தான் ஒருவனே அனுபவித்தால் பொறுப்பளோ ஆண்டாள்? ஆகவே "பெண் படையார் உன்மேல் பெரும் பூசல் சாத்துகின்றார்" (நாச்சி. திரு. 7-8) என்று தன்னோடு மற்றப் பெண்களையும் சேர்த்துக் கொண்டு சங்காழ்வானோடு பூசலிடுகின்றாள். ஆகவே நாமும் "இன்கனிதனியருந்தான்" என்றவாறு பகவத் விஷயத்தில் ருசியுடையார் அனைவரும்கூடி அவ்வமுதத்தினைச் சுவைத்து இன்புறுவோம்.





# கண்ணன் காட்டிய வழியில் பார்த்தனும் பரதனும்



पार्थाय प्रतिबोधितां भगवता नारायणेन स्वयं
व्यासेन प्रथितां
पुराणमुनिना मध्ये महाभारतम् ।
अद्वैतामृत वर्षिणीं भगवतीमष्टा दशाध्या-
यिनीं अम्ब त्वामनुसंदधामि
भगवद्गीते भवद्वेषिणीम् ॥

பார்த்தனுக்காகப் போதிக்கப்பட்டது கீதை. நாராயணனாலேயே நரனுக்கு நலம் பயக்கப்படைக்கப்பட்டது. தொன்மை முனி வியாசரின் மகாபாரதத்தின் மத்தியிலே அமைந்தது. இரண்டு அற்ற ஒன்றை நிலை நிறுத்தி அமுதை வர்ஷிக்கும் பதினெட்டு அத்யாயங்களுடன் மிளிரும் கீதா பகவதி தாயே உன்னை தான் வணங்குகிறேன். விளையாட்டுப் பிள்ளையாக, குழந்தையாக, காதலனாக, பணி ஆளாக, தோழனாக, பலவகையாக பணி இயற்றுபவன் ஒருவனே. அவனே நாராயணன். பார்த்தனுக்கு நண்பன் ஸ்தானத்திலிருந்து குருவாக வளர்ந்து பரம குருவாக பரிணமிக்கிறான். அவனது போதனையால் பார்த்தன் பரிபக்குவ நிலை எய்துகிறான். அதேபோல் பரதனும் தன் குல வசிட்டன் சொல்படி நடந்து பரிபூரணத்துவத்தையும் பெறுகிறான். கண்ணன் மூலம் வியாச பகவான் பார்த்தனை வழி நடத்துகிறான். வசிட்டனே நேரடியாக பரதனை வழிநடத்துகிறான்.

டாக்டர். கை. அழகப்பன்,
திருச்சிராப்பள்ளி.

போர்க்களத்திலே பிதாமகனையும், துரோணனையும் நண்பர்களையும் பந்துக்களையும் எதிரிகளாகக் கண்ட அர்ச்சுனன் சோகக் கடலில் மூழ்கி, திகைத்துத் தேர்தட்டிலே வில்லை நழுவவிட்டுச் செயலாற்றும் திறன் இழந்து சோர்ந்துவிட்டான். அவனுடனே வாழ்ந்து, அவனுக்காகவே வாழ்ந்து, அவனுடைய சக தோழனாக அவதரித்த கண்ணன், அவனுக்காகவே கீதை இசைக்கிறான். கண்ணன் உபதேசத்தில், நிலை உணர்ந்து சோகம் தவிர்த்து. செயல் வீரனாக நிமிர்ந்து நின்று, அயர்வு நீங்கி வில் ஏற்றிக் கணைத் தொடுத்துப் பகைவனைவென்று வெற்றி வாகை சூடினான். புகழ் அடைந்தான். பத்து அத்யாயத்திற்கு பிறகுதான் கண்ணன் யார் என்பதை உணரத் தொடங்குகிறான். கேகய நாடு சென்று இருந்த பரதன் அயோத்தி திரும்பியவுடன் தந்தைவானகம்அடைந்ததும்தனயன் கானகம்அடைந்ததும்தன் தாய் செயலால்தான் என்று கேள்விப்பட்டு நாட்டின் அவலநிலை கண்டு தன் நிலை தடுமாறி மனமுடைந்துசோகத்தில்மூழ்கி அன்னை கோசலையிடம் சென்று அழுது கதறுகிறான். "அண்ணன் அரசு துறக்க கைகேயியின் கைங்கர்யத்திற்கு நான் துணை நின்றவனாக இருப்பின் என் குருவும் குல குருவுமான வசிட்டனையும் அவன் மனைவி அருந்ததியையும் கொன்ற பாவம் என்னைச் சேர்க" என வருந்தி அழுகின்றான்.

"மகனே வருந்தல் வேண்டாம், உன்னை நான் அறிவேன்" என்று ஆறுதல் அளிக்கும்போது அங்கு வசிட்டர் தோன்றினார். பரதன், பார்த்

# திருமூலர் தந்த கருவூலம்

திருவாவடுதுறையில் பல்லாண்டு காலம் மோனத்தவமிருந்து திருமூல நாயனார் மூவாயிரம் மந்திரப் பாடல்களை நமக்கு வழங்கியருளினார். 'திருமந்திர மாலை' என்னும் சாத்திர நூலாகவும் தோத்திர நூலாகவும் அது மலர்ந்தது. பன்னிரு திருமுறைகளில் 10ஆம் திருமுறையாக அது திகழ்கிறது, அறுபத்து மூன்று நாயன்மார்களில் திருமூலர் ஒருவர். 'தோத்திரத்துக்குத் திருவாசகம். சாத்திரத்துக்குத் திருமந்திரம்' என்பது பழமொழி.

காலம், தேசம், உயர்வு, தாழ்வு, சாதி, மொழி முதலியவைகளையும் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலையும் பொழியும் கலைக் களஞ்சியமாய், ஞானக் கருவூலமாய் அது விளங்குகிறது.

"தேவர் குறளும், திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒரு வாசகமென்றுணர்"

என்று ஔவை பிராட்டியார் நம் ஐயம் அகற்றுகிறார்.

"ஆமேவு பால்நீர் பிரிக்கின்ற அன்னம்போல்
தாமே தனி மன்றில் தன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கரணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே"

திருமந்திரம் கூறும் ஒரு மந்திரம் இது. "தில்லைச் சிற்றம்பலவன் ஆடும் கூத்து அன்னம் பாலில் நீரைப் பிரிப்பது போல கருவி கரணங்களால் பல் பிறவிகளில் சீவர்கள் ஈட்டிய வினைகளில் தீயவற்றைப் பிரித்து எடுத்துவிடும். பின் வறுத்த விதைபோல் சீவர்கள் நிலை ஆகிவிடும். வினைகள் அங்கு முளைவிடுவது இல்லை. முற்றிலுமே அழிந்துவிடும். அம்பலவாணனின் கூத்து இது!" என்று திருமூலர் கையில் கனி போன்று எடுத்துக் காட்டுகிறார். ஆ! பிறவிப் பிணிக்கு பெரு மருந்து அது! வேறு நமக்கு என்ன வேண்டும்?

"திருமூல தேவனையே சிந்தைசெய் வார்க்குக்
கருமூலம் இல்லையே காண்"

—தனிப்பாடல்.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

தன் இருவருக்கும் ஒரே மாதிரியான சோகநிலை, தடுமாற்றம். செய்வது அறியாது திகைக்க, தானே குருவாக ஆகி பார்த்தனுக்கு உபதேசம் செய்கிறான் கண்ணன். குலகுருவே குருபதவியிலிருந்து உபதேசம் செய்கிறார் பரதனுக்கு. இருவருமே குரு உபதேசங்களால் தெளிவடைந்து மனஉறுதியுடன் இரு வேறு நிலைகளில் நின்று செயல்படுகின்றனர். கண்ணன் வாக்கு:

न जायते म्रियते वा कदाचिन्
नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो
न हन्यते हन्यमाने शरीरे ॥

"ஆத்மா அழிவற்றது, பிறப்பற்றது. இல்லாததாக இருந்து இருப்பதாகத் திரும்புவதில்லை. வளர்வும் இல்லை, தேய்வும் இல்லை, நிரந்தரமானது. சாஸ்வதமானது. சரீரம் அழியினும் தான் அழியாதது."

இதே தர்மத்தை வசிட்டன் வாயிலாக பரதனுக்கு உபதேசிக்கப்படுகிறது, அத்யாத்ம ராமாயணத்தில்.

वृद्धो राजा दशरथो ज्ञानी सत्यपराक्रमः ।
भुक्त्वा मर्त्यं सुखं सर्वमिष्टवा विपुलदक्षिणैः ।

வயோதிகனான தசரதன் சத்ய தர்மத்தைக் கடைப்பிடித்து ஒழுகிய ஞானவான். சர்வ அபிலாட்சைகளையும் அடைந்து அனுபவித்து மண்ணுலகை நீத்து விண்ணுலகை அடைந்து, இந்திரப் பதவியைப் பெற்றுள்ளான்.

त्वं शोचसि वृथैव त्वमशोच्यं मोक्षभाजनम् ।
आत्मा नित्योऽव्ययः शुद्धो जन्मनाश-
विवर्जित. ॥

शरीरं जडमत्यर्थमपवित्रं विनश्वरम् विचार्य
प्राणे शोकस्य नावकाशः कथञ्चन

"விடுபட்டு மோட்சம் அடையத் தகுதியுடைய முதியவனுக்காக நீ வருந்தத் தகாது. துக்கத்தைத் துற. சோகத்திலிருந்து மீள்வாய். ஆத்மா அநாதியானது. என்றும் நிலைப்பது. அழியாதது, நிர்மலமானது. மாறுபாடுகளுக்கு அப்பாற்பட்டது. வீடுபேறு அடைந்த அரசனைக் குறித்து வருந்தல் வேண்டாம்."

यथा त्यजति वै जीर्णं वासो गृह्णाति नूतनं ।
तथा जीर्णं परित्यज्य देही देहं पुनर्नवम् ॥

"மனிதன் நைந்த ஆடையை நீத்து நல்ல ஆடையை அணிகிறான். ஜீவனும் தனது தோய்ந்த உடலை நீக்கி புதிய கூட்டில் அமர்கிறான். இத்தகைய மாறிமாறி நிகழும் நிகழ்ச்சிக்கு நீ வருந்துவதேன்?"

இதையே கண்ணன் பாண்டவனுக்கும் பகர்கின்றான்.

वासांसि जीर्णानि यथा विहाय
नवानि गृह्णाति नरोऽपराणि ।

तथा शरीराणि विहाय जीर्णानि
अन्यानि संयाति नवानि देही ।।

'இந்த உலகில் கிழிந்த உடையை களைந்துவிட்டு நல்ல உடையை மாற்றி அணிகிறான். அதே போல் ஆன்மா தோய்ந்த உடலை நீக்கி புதிய உடலை அடைகிறது. பழை யன கழிந்து புதியன புகுகின்றன.'

பரதனை நோக்கி வசிட்டன் 'भजत्येन तत्र शोकस्यावसरः कुतः இந்த சுழற்சி கண்டு சோகமடைவது ஏன்? आत्म न म्रियते जातु जायते न च वर्धते ।। ஆத்மாவுக்கு பிறப்பு இல்லை, இறப்பு இல்லை, மூப்பு இல்லை, முடிவு இல்லை. இதனைக் கண்டு வருத் தமோ துக்கமோ அடையத் தேவை இல்லை. துக்கத்தைத்தவிர். துவண்டு விடாதே. மேல் ஆவன செய்வாய்' எனப்பகர்கின்றான். குருவின் ஆணை ஏற்று, அறியாமையால் அடைந்த துன்பம் நீங்கி ஆத்ம சுத்தியுடன் தந்தையின் இறுதிக் கடன் கழித்து மேலே நகர்கின்றான். பார்த்தனும் பரதனும் அநேகமாக ஒரே நிலையில் தள்ளப்பட்டு தளர்ந்து மனமுடைந்து வருத்தத்தில் மூழ்கி இருந்தனர். ஒரு வனுக்குத் தோழன் உருவில் இருந்து கண்ணன் அமைதிப்படுத்துகிறான். மற்றவனுக்கு குலகுருவே போதிக் கின்றார். இருவருமே தெளிந்த சிந்தை யுடன் செயல்படுகின்றனர். அவர வர் தம் தம் நி[illegible] விருந்து பலன் துய்க்கின்றனர். வில்லையும் வீரத் தையும் துறந்த விஜயன் காண்டீ பத்தைக் கையில் ஏந்தி கணைத் தொடுத்துப் பாரதப் போரை முன் நின்று நடத்தி வெற்றி வாகை சூடு கிறான். பரதனும் தெளிந்த சிந்தை யனாக மர உரி தரித்து வார் சடை புனைந்து அண்ணன் பாதுகையையே அடையாளமாகக் கொண்டு நந்திக் கிராமத்தில் தங்கி முனி உருவாகி அயோத்தியை செவ்வனே ஆட்சி செய்து, இராமன் நாடு திரும்பிய வுடன் ஆட்சியைத் தந்துவிட்டு ஓய்வு பெறுகிறான். "மும்மையின் நிறை குணத்தவன் நின்னினும் நல்லநால் குறைவிலன்" என்று கோசலையால் புகழப்பட்ட பரதன் "புகழினோய்! தன்மை கண்டால் ஆயிரம் இராமர் நின்கேள் ஆவரோ" என குகன் வாயிலாகவளர்கிறான். மீட்சிப் படலத்தில் மீண்டும் "தரும நீதியின் நற்பயனாவது உன் கருமமேயன்றிக் கண்டிலம் கண்களால் அருமை ஒன் றும் உணர்ந்திலை ஐயநின் பெருமை ஊழிதிரியினும பேருமோ" "எண் ணில்கோடி இராமர்கள் என்னினும் அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ புண்ணியம் எனும் நின் உயிர் போயினால் மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ" என விண் ணளவு உயர்கிறான் கோசலை வாயி லாக.

கீதையில் கூறியவைகளை நடை முறைக்கு கொண்டுவர கீதையைப் படித்து உணர்ந்து உள்ளத்தை பண் படையச் செய்ய வேண்டும். புராணக் காலத்திலும் மட்டுமல்லாமல் இக் காலத்தில் அந்த நெறியில் நிற்பவர் பலர் இருப்பினும் நமக்கு அறிமுகமா தில்லை. பரதனும் தன் குருமூலம் நெறியறிந்து நடந்து நன்மை அடை கிறான். அரசகுமாரனாக இருந்து போர் புரியும் தொழில் செய்வது தன் கருமத்தை செய்ய வேண்டும் என்று நிர்ப்பந்தம்இல்லை. 'அதேஅரசாட்சி யை முனி உருவில் முற்றும் துறந்த ஞானியாக இருந்து தன் கர்மத்தை செய்கிறான். ஒருவன கர்மம் செய்து ஞானியாகிறான். பின்னவன் ஞானி யாக இருந்து கர்மம் செய்கிறான். இருவருமே கண்ணன் காட்டிய வழி நடந்து நமக்கு விளக்கமாகவும் வழி காட்டிகளாகவும் விளங்குகிறார்கள்.

## ஐம்பெரும் திருப்பதிகள்

1. புராணப் புகழ் பெற்றவை—பௌராணிகம்.
2. தானே தோன்றியவை—சுவயம் வ்யக்தம்.
3. ரிஷிகளால் ஸ்தாபிக்கப்பட்டவை— ஆர்ஷம்.
4. ஆழ்வார்களால் பாடப் பெற்றவை—திவ்யதேசம்.
5. ஆசாரியர்கள் அபிமானம் பெற்றவை—அபிமான ஸ்தலங்கள்.

## மூன்று பெரும் தலங்கள்

1. கோயில்—திருவரங்கம்—போக மண்டபம்.
2. திருமலை—திருவேங்கடம்—புஷ்ப மண்டபம்.
3. பெருமாள் கோயில்—காஞ்சிபுரம்—தியான மண்டபம்.

## பஞ்ச கிருஷ்ண க்ஷேத்ரங்கள்

1. திருக்கண்ணமங்கை.
2. திருக்கண்ணங்குடி.
3. கவித்தலம்.
4. திருக்கண்ணபுரம்.
5. திருக்கோவலூர்.

தொகுப்பு : திரு. தி. வி. பார்த்தசாரதி - காஞ்சிபுரம்.

# அல்லிக்கேணியில் அருள்பாலிக்கும் அண்ணல்

சென்னை மாநகரின் சீரிய பகுதிகளில் ஒன்று திருவல்லிக்கேணி. "அல்லி" என்னும் ஒரு வகை நீர்ப்பூ மலிந்து மலர்ந்துள்ள சிறிய குளத்தின் பெயர். அது பொருந்தியுள்ள ஊருக்கும், அங்குள்ள கோயிலுக்கும் பெயராக வழங்கலாயிற்று. (கேணி= சிறிய குளம்; தொல் - சொல் 400 உரை.)

"அல்லிக்கேணி" என்னும் இரண்டு சொற்களும் "திரு" என்னும் அடைமொழி பெற்றுத் திருவல்லிக்கேணி ஆயிற்று (வ்-உடம்படு மெய்) திரு அரங்கம்-திருவரங்கம் ஆவது போல! கடற்கரைக்கு மிகவும் அருகிலுள்ளமை இதன் மற்றொரு சிறப்பு.

நூற்றெட்டுத் திவ்ய தேசங்களுள் இதுவும் ஒன்றாகும். பேயாழ்வாரும் (மூன்றாம் திருவந்தாதி-16) திருமழிசைப்பிரானும் (நான்முகன் திருவந்தாதி-35) அருள்மாரியாகிய திருமங்கை மன்னனும் இதனைப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

பேயாழ்வார் "ஒருவல்லித்தாமரையாள் ஒன்றிய சீர்மார்வன்" என்றும் திருமழிசைப்பிரான், "மாவல்லிக் கேணியான், ஐந்தலை வாய் நாகத்து அணைவாளாக்கிக் கிடந்தருளும்" என்றும், மங்கை வேந்தன் "ஆதியை அமுதை எனையாளுடையப்பனை" என்றும் இங்குள்ள அரங்கனைப் பாடியுள்ளனர்.

திருமங்கை மன்னன் தமது 3-ஆம் பெரிய திருமொழியில் 1, 3, 4, 5, 6 ஆகிய ஐந்து பாசுரங்களால் ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமானையும், 7ம் பாசுரத்தால் ஸ்ரீ இராமபிரானையும், எட்டாம் பாசுரத்தால் தெள்ளிய சிங்கம் ஆகிய தேவையும், ஒன்பதாம் பாசுரத்தால் "ஆனையின் துயரம் தீரப்புள்ளூர்ந்த" அருளாளனையும் வாயார - நெஞ்சார வாழ்த்தியுள்ளார். ஒரே திவ்ய தேசத்திலுள்ள ஐந்து எம்பெருமான்களும் மங்களா சாஸனம் பெற்றுள்ள தனிச் சிறப்பு வாய்ந்தது இம்மாடத் திருவல்லிக்கேணி.

பல திவ்ய தேசங்களைத் தமது அருள் மாரியாய் - ஈரச் சொல்லால் வாழ்த்திய மங்கை வேந்தனை 'அருள் மாரி' எனப் புகழ்ந்து அழைப்பது முற்றும் தகுமன்றோ?

பழம் பெருமை :

ஐந்து ஆறாம் நூற்றாண்டுகளில் விளங்கியவராகக் கருதப்படும் பேயாழ்வாரும், ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்களாகிய திருமழிசைப் பிரானும், திருமங்கை மன்னனும் நேரில் எழுந்தருளி இங்குள்ள எம்பெருமான்களை வாழ்த்தியுள்ளதால், இவர்கள் காலத்திற்குப் பல நூற்றாண்டுகள் முன்பிருந்தே இச்சந்நிதி பிரபலம் அடைந்திருக்க வேண்டும் என்பது நன்குப் புலப்படும்.

'சன்மிஷ்டை'

திருவல்லிக்கேணிக்குப் "பிருந்தாரண்யம்" அதாவது "நெருஞ்சிக் காடு" என்னும் பழமையான வடமொழிப் பெயரும் உண்டு. இங்குள்ள ஐந்து எம்பெருமான்களைப் பற்றியும் அவர்களுக்குரிய இந்திர, சோம, மீன, அக்நி, விஷ்ணு என்னும் ஐந்து புஷ்கரிணிகளைப் பற்றியும், இவற்றினும் வேறான "கைரவிணி" அதாவது "அல்லிக்கேணி"யைப் பற்றியும் "பிருந்தாரண்ய மாகாத்மியம்" என்னும் வடமொழி நூல் விரிவாகக் கூறுகின்றது.

இதனால், பழங்காலத்தில் இந்த ஐந்து எம்பெருமான்களும் தனித் தனியே தததமக்குரிய புஷ்கரிணியின் கரையில் கோயில் கொண்டிருந்திருக்க



ஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவி, ஸ்ரீருக்மிணி ஸமேத ஸ்ரீ பார்த்தசாரதி - உற்சவர் ஏக சிம்மாஸன கோலம்.



பெருமாள் கோயில் முகப்புத் தோற்றம்

வேண்டும். பிற்காலத்தில் ஒரே கோயிலுக்குள் அவ்விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்திருக்கலாம் எனக் கருதலாம். தற்காலம் 'அல்லிக்குளம்' தவிர மற்ற ஐந்து குளங்களும் நன்கு தூர்ந்து குட்டையாகிப் பின் மறைந்தன போலும்!

கோயிலுக்கு முன்னால் பெரிய திருக்குளம்—நடுவில் நீராழி மண்டபத்துடன் காட்சியளிக்கிறது. இக்குளத்துக்கு "கைரவிணி புஷ்கரணி" என்ற பெயர். இதில் எப்பொழுதும் ஸ்நான விசேஷமுண்டு. இக்குளத்தில் மீன்களே இல்லை. அப்படியிருந்தும் தண்ணீர் சுத்தமாக இருக்கிறது.

திருக்குளத்தின் மேற்குக் கரையில் கோயில் அமைந்துள்ளது. முதலில் ஒரு நாலுகால் மண்டபம்; அதையடுத்து முப்பத்தியாறு கால்கள் கொண்ட மற்றொரு பெரிய மண்டபம். இதனையடுத்து ஐந்தடுக்கும் ஏழு கலசங்களும் கொண்ட ராஜ கோபுரம் கிழக்கு நோக்கிக் கம்பீரமாகக் காட்சி கொடுக்கிறது. கோபுர தரிசனம் கோடி புண்ணியம் அல்லவா? தரிசிக்கிறோம்.

மூலஸ்தானம்:

மூலஸ்தானத்தில் கம்பீரமாக முறுக்கிவிட்ட மீசையோடு ஆஜானுபாஹுவாக நின்று கொண்டிருக்கிறாரே அவர்தான் திருமலை—திருப்பதி வேங்கடநாதன். ஆம்! வேங்கடநாதன்தான் இந்த க்ஷேத்திரத்தில் "ஸ்ரீ பார்த்தசாரதி" கோலத்தில் வந்திருக்கிறார். அதனால்தான் மூலவருக்கு "வேங்கட கிருஷ்ணன்" என்ற பெயர். ஸ்ரீ பார்த்தசாரதி என்ற பெயர் முன்னாலிருக்கும் உற்சவமூர்த்திக்குத்தான்!

திருப்பதி ஸ்ரீ வேங்கடாஜலபதி இங்கே எப்படி வந்தார் என்ற கேள்வி எழுகிறது. அதற்கும் காரணம் வழங்கப்படுகிறது. திருமலை மலைமேல் நிற்கும் வேங்கடாஜலபதியைத்தரிசிக்க - தொண்டைமான் சக்கரவர்த்தி சுமதி என்பான் சென்றார். அவருக்கு ஒரு ஆசையுண்டாயிற்று. "இந்த ஸ்ரீ நிவாஸப் பெருமாள் அர்ஜுனனுக்கு ஸாரத்யம் செய்த திருக்கோலத்தில் ஸேவை சாதிப்பாரோ?" என்று. உடனே பெருமாள் இவர் முன் தோன்றி, "மயிலை பிருந்தாவனத்திற்கு வந்தால் அக்கோலத்தில் ஸேவை சாதிக்கிறேன்" என்றருளினார். இந்த வாக்கிற்கேற்ப இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீ வேங்கடாஜலபதியே ஸ்ரீ பார்த்தசாரதி திருக்கோலத்தில் தரிசனம் தந்தார். இந்தத் தொடர்பினால்தான் மூலவருக்கு 'வேங்கட கிருஷ்ணன்' என்ற அழகிய திருநாமம்.

திருமலையில் மூலவருக்குமேல் உள்ள விமானத்திற்கு "ஆனந்த



கைரவிணி புஷ்கரணி — திருமதி. கமலா மாரியப்பன்.

நிலைய விமானம்'' என்று பெயர்! தங்கத்தினால் ஆனது. ஆனால், திருவல்லிக்கேணியிலோ மூலவருக்கு நேரே மேலுள்ள விமானத்திற்கும் "ஆனந்த விமானம்'' என்று பெயர்; என்ன பொருத்தம் பாருங்கள்! தவிர, இங்கே வேங்கட கிருஷ்ணனாகிய ஸ்ரீ பார்த்தசாரதி தனியே வரவில்லை. அண்ணன் பலராமன், தம்பி சாத்யகி, மனைவி ருக்மினி, மகன் பிரத்யும்னன், பேரன் அநிருத்தன்—இப்படி குடும்பசமேதராய் காட்சி தருகிறார்!

ஸ்ரீ பார்த்தனுக்கு ஸாரத்யம்—தேரோட்டிய சமயத்தில் இனி எந்த ஆயுதமும் எடுப்பதில்லை என்று சத்தியம் செய்தவரல்லவா, இந்த அண்ணல்! அதனால் மூலவர் கையில் சக்கராயுதம் இல்லை. ஆனால் வலது கையில் சங்கம் இருக்கிறது. "சங்கமிடத்தானே அச்சோ அச்சோ'' என்ற ஆழ்வார் வாக்குப்படி, சாதாரணமாக இடது கையில் இருக்க வேண்டிய சங்கம் இங்கே வலது கையில் இருப்பது குறிப்பிடத்தக்கது.



ஒரு பக்தை-நெல்லையப்பர் திருக்கோயில் —நெல்லை.
. கோவை. சீதாராம்.

மூலவருக்கு முன்னால் உற்சவர் ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்ரீதேவி, பூதேவி மார்கள் சமேதராய் காட்சி கொடுக்கிறார். திருமுகத்தில் எல்லாம் போரில் ஏற்பட்ட வடுக்கள். சர்வாலங்கார பூஷிதராய் பட்டாடைகள் அணிந்து, வைர அணிகலன்களோடு ஜ்வலித்துக் கொண்டிருக்கும் காட்சி உள்ளத்தைக் கொள்ளை கொள்வன. பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும். ஆனால், திருமங்கை ஆழ்வாரோ "கண்டேன்'' என்று அழகாகக் கூறுகிறார்.

இக்கோயிலில் ஒவ்வொரு சித்திரை மாதமும் பிரம்மோத்ஸவம் நடைபெறுகிறது. இதை, முதன் முதலில் ஆரம்பித்து வைத்தவர் பரம பக்தனான சுமதி என்னும் தொண்டைமான் சக்கரவர்த்திதான்; இன்றும் அப்படியே நடந்து வருவது வெளிப்படையாகும். இச்சித்திரைத் திருவிழாவில்தான் ஏகசிம்மாஸனம் நடைபெறுகிறது. அன்று ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாள் ஸ்ரீதேவி பூதேவியுடனும் ஸ்ரீ ருக்மினி பிராட்டியுடனும் காட்சி தருகிறார் என்பது குறிப்பு. அன்று ஏராளமான யாத்திரிகர்கள் வந்து போவர். இத்தகைய பழமையும் பெருமையும் வாய்ந்த இக்கோயிலுக்கு ஆஸ்திக சிகாமணிகள் கோபுரம், மதிள், மண்டபங்கள் முதலியவை எடுப்பித்திருகக வேண்டும் என்று கொள்வது பொருந்தும். இப்படியாக இக்கோயில் இன்று பிரபல மடைந்துள்ளது எனலாம்.

கல்வெட்டுக்கள :

திருவல்லிக்கேணியைப் பற்றிய கல்வெட்டுக்களும் இதன் பழமையை நன்கு விளக்குகின்றன. இக்கோயில் கல்வெட்டொன்று தந்தி வர்மப் பல்லவன் காலத்தது. "தென்னன் தொண்டையர்கோன் செய்த நன் மயிலை திருவல்லிக்கேணி'' என திருமங்கை மன்னன் தமது பாசுரத்தில் குறிப்பிடும் பல்லவன் தந்தி வர்மனாகவே கருதப்படுகிறான் (234)

மற்றொரு கல்வெட்டு (AR-242) சோழ மன்னனான இராஜராஜ தேவரின் 23-வது ஆண்டில் ஏற்பட்டதாகும். இது ஒரு கைங்கரியத்தை விவரிக்கின்றது. அதாவது ரேணிகுண்டாவை அடுத்துள்ள குடிமல்லம் என்னும் சிற்றூரிலுள்ள கல்வெட்டொன்று (229) தந்தி வர்மப் பல்லவ மகாராஜாவைக் குறிப்பிடுவதால் திருவல்லிக்கேணிக் கல்வெட்டுக் கூறும் தந்தி வர்மனும் இவனே என்று கொள்வதில் தடையில்லை.

தந்தி வர்மப் பல்லவனது 12-வது ஆட்சியாண்டைச் சார்ந்த அக்கல்வெட்டில் அக்கோயிலார், கோயிலுக்குச் சொந்தமான நிலத்தை அடமானம் வைத்ததால், ஸ்வாமியின் நைவேத்தியத்திற்கு வேண்டிய அரிசி இல்லாதிருந்தது என்றும், புகழ்த்துணை விசையரையன் என்பான் அந்நிலத்தை அடமானத்தினின்றும் மீட்டுத்தந்து நித்திய படித்தரத்தில் குறைவேற்படாதபடி செய்தான் என்ற செய்தி கூறப்படுகிறது.

விஜய நகரத்து ஆட்சி காலத்திய கல்வெட்டு ஒன்றில் (239) சதாசிவ மகாராயரால் (1542-70) இங்குள்ள சந்நிதிகள் திருப்பணி செய்யப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. பொறியியல் நூதன சாதனங்கள் இல்லாதிருந்த பழங்காலத்தில் மதிள்களும், மண்டபங்களும் கருங்கல்லாலேயே கட்டி முடிக்கப்பட்டதிலிருந்து அக்கால மக்களுக்கு இருந்த பக்தி சிரத்தைகளை நாம் எதில் அறியலாம்.

வரலாற்றுச் செய்திகள் :

பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் திருவல்லிக்கேணி கோயில் சந்நிதிகள் நன்கு புதுப்பிக்கப் பெற்றதோடு சில திருப்பணிகளும் செய்யப் பெற்றன. வியாஸர்பாடியைச் சுற்றிலுமுள்ள ஊர்ப்பகுதி நிலங்கள் எம்பெருமான்களின் படித்தரத்திற்காக தானம் செய்யப்பட்டன.

பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் திருவல்லிக்கேணி, கோல்கொண்டா நவாபுக்கு உட்பட்ட கர்நாடக நவாபுகளின் ஆளுகையில் இருந்தது. முசாகான் என்பவர் இந்தக் கிராமத்திற்கு ஆண்டுதோறும் ஐம்பது பணம் கொடுத்தார் என்று தெரியவருகிறது. (கி. பி. 1672).

இதற்குப்பிற்காலத்தில் பிரெஞ்சுக்காரரும் டச்சுக்காரரும் இப்பகுதியில் பண்டகசாலை நடத்தி வந்தனர். அதனால் இவர்களுக்குள் அடிக்கடி போர் நடந்தது. இப்போரில் வென்றவர் ஆட்சியின்கீழ் திருவல்லிக்கேணி இருந்து வந்த போதிலும் கோயில் விஷயத்தில் எவரும் தலையிடவில்லை. அவ்வப்போது வேண்டிய உதவிகள் செய்து வந்தனர்.

பதினெட்டாம் நூற்றாண்டில் வியாபாரக் கம்பெனிகள் நடத்தி வந்த பிரஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் அடிக்கடி போர்கள் நடந்தன. முடிவில் ஆங்கிலேயர் பிரெஞ்சுக்காரரை வென்று அவர்களை அடியோடு வெளியேற்றிச் சென்னைப் பட்டணத்தைக் கைப்பற்றினர். இக்கடும் போர்களினால் திருவல்லிக்கேணி சந்நிதிக்கு ஒரு சிறிதும் குறைவு ஏற்படவில்லை என்பது குறிப்பாகும்.


ஸ்ரீ திருவிக்ரமர் ஆலயம் — திருக்கோயிலூர்

**மற்றையச் சிறப்புக்கள்:**

பூர்வ ஆசார்யர்களான ஸ்ரீ ஆளவந்தாரும், எம்பெருமானாரும், ஸ்ரீ வேதாந்த தேசிகரும் இங்கு எழுந்தருளி மங்களா சாஸனம் செய்தனர். மேலும், திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும் தமது நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில்—"திருவல்லிக்கேணியின் கண்ணன் சீர்த்தியை விரும்பிப் போற்றினால் அது பிறவிக்கு நல் மருந்தாம்—முக்தியுலகிற்கு ஏணியாம்" என்று மங்களா சாஸனம் செய்துள்ளார்.

ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் திருமலைக்குச் சென்று திரும்பும்போது இங்கே தங்கி, ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாளைத் தரிசித்துக் கீர்த்தனை ஒன்று அருளியதாகப் பெரியோர் கூறுவர். இக்கீர்த்தனையைச் சங்கீத வித்வ சிரோமணிகள் கச்சேரிகளில் பாடுகிறார்கள். மெய் மறந்த நிலையில் ரசிக்கிறோம்.

உலகப் புகழ் வாய்ந்த கடற்கரையிலே—"இரவியின் கதிர்கள் நுழைதல் செய்து அறியாத" சோலையாகவும், "குரவமே கமிழும் குளிர் பொழி"லாகவும் கண்டுகளித்த திருமங்கை மன்னனின் திருவல்லிக்கேணி இன்று மாட மாளிகைகள், கூட கோபுரங்கள் மிகுந்து சென்னை மாநகரின் ஒரு முக்கிய பகுதியாகக் காட்சியளிக்கிறது. சுருங்கக் கூறுமிடத்து "திருவல்லிக்கேணி தமிழகத்தின் திருப்பதி" என்றே துணிந்து கூறலாம்.

இவ்வளவு சீரும் சிறப்பும் எய்தியிருப்பதற்கு அடிப்படைக் காரணம் என்ன? என்று துருவிப் பார்த்தோமானால் — "அருள் மாரியாகிய திருமங்கை மன்னனின் ஈரச் சொல்லே — இன் தமிழ்க் கவிகளே" என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.







ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 6½×6½ செ.மீ. ரூ. 750/- 5×5 செ.மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்ததிருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் மாலைகள் சுத்த வெள்ளியால் செயயப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்கு கிடைக்கும். | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்பக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

**போன்: கடை ... 472013 மா லேரு டிரங்கு வீடு: ... 861254**


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**



நாராயணனை பஜனை செய்து நாமத்தை உச்சரித்தால் மட்டும் போதும் மோக்ஷத்தையடைந்துவிட லாம். நான்கு யுகங்களில் கலியுகம் மிகவும் கொடூரமானது. நல்ல கார் யங்களைச் செய்யவும், சொல்லவும் முடியாது. எல்லாமே பாபங்களை அடிப்படையாக வைத்தே நடை பெறும். ஆகையால்

कलौ कल्मषचित्तानां पापद्रव्योपजीविनाम् ।
विधिक्रियाविहीनानां गतिर्गोविन्दकीर्तनम् ।।

பொய், பொறாமை முதலிய கெட்ட குணங்களையுடையவர்களுக்கும், பாபகார்யங்களினால் உண்டாகும் பொருளைக் கொண்டு வாழ்பவர் களுக்கும், வேதத்தில் கூறியபடி கர் மாக்களைச் செய்ய முடியாதவர் களுக்கும் நாராயணனுடைய நாமமே கதியாகும்.

நாராயணனின் நாம ஸங்கீர்த்த னம் எப்படி செய்வது என்றால் அதற்குப் பல வழிமுறைகள் கூறப்

# ஸ்ரீபோதேந்த்ர ஸ்வாமிகள்

भगवन्नाम सांम्राज्य लक्ष्मीसर्वस्व विग्रहम् ।
श्रीमद् बोधेन्द्रदेशिकेन्द्रमुपास्महे ।।

மக்கள் நல்லவழியில் நடக்கவும், இறைபேறு பெறவும், மகான்கள் பிறந்து, வாழ்ந்து, நடந்து காட்டு கிறார்கள். தாங்கள் செய்த பாப புண்யத்திற்குத் தகுந்தபடி பலன் அனுபவிக்கிறார்கள் மக்கள். ஆனால் மகிழ்ச்சியும், சுகமும் வாழ்க்கையில் ஏற்பட்டால் தலைகால் புரியாமல் இருக்கிறார்கள். அதேபோல் துக்க மும், கஷ்டமும் ஏற்பட்டால் நல்லோ ரையும் இறைவனையும் நாடுகிறார் கள்.பொதுவாக மக்கள் மோக்ஷத்தை அடைய விரும்புகிறார்கள். அதை அடைய நற்கார்யங்களைச் செய்ய வேண்டும். அதற்குச் சூழ்நிலையும் மனநிலையும் அமைய வேண்டும். இறையருளான மோக்ஷத்தையடைய ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வொரு வழி கூறப்பட்டுள்ளது.

ध्यायन् कृते, यजन यज्ञैः त्रेतायां,
द्वापरेऽर्चयन् । यदाप्नोति तदाप्नोति

க்ருதயுகத்தில் தியானம் செய்தால் மோக்ஷமடையலாம், த்ரேதாயுகத் தில் யாகங்களைச் செய்தால் மோக்ஷ மடையலாம், துவாபரயுகத்தில் அர்ச்சனை ஆராதனை முதலியவை களைச் செய்தால் மோக்ஷமடைய லாம். ஆனால் கலியுகத்தில்

டாக்டர் டி.ஜி. அனந்தசுப்ரமணியன்
பாண்டிச்சேரி.

பட்டுள்ளன. அவைகளில் பக்தி மார்க்கமே மேலானதாகும். இதைச் செய்வதற்கு எந்தவிதமான கட்டுப் பாடும் கிடையாது. கலியுகத்தில் நாமஸங்கீர்த்தனம் செய்வதே பக்தி யாகும். இம்முறையைப் பல பெரி யோர்கள் செய்து காட்டியுள்ளார் கள்.

विष्णोर्गानं च नृत्तं च नटनं च विशेषतः ।
ब्रह्मन् ब्राह्मणजातीनां कर्तव्यं नित्यकर्मवत् ।।

நாராயணனுடைய நாமத்தை கானம் செய்தும், நாட்டியம், நடனம் முதலியவைகளாலும், நித்திய கர்மா வைப் போல் தினமும் அந்தணர் முத லான எல்லா இனத்தவர்களும் செய்ய வேண்டும். நாமஸங்கீர்த்தன



ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோவில் தீர்த்தம் (ஆழ்வார் தீர்த்தம்-திருப்பதி.)

மான பஜனையைப் பற்றி பல கீர்த்தனைகளைப்பாடியுள்ளார் ஸ்ரீதியாகராஜஸ்வாமிகள். பஜனை செய்யும் முறையைக் கூறுகிறார்.

"நித்துர நிராகரிஞ்சி முத்துக
தம்புரா பட்டி
சுத்தமைன மனஸுசே
ஸுஸ்வரமுதோ
பத்து தப்பக பஜியிஞ்சே பக்த
பாலனமு ஸேயு
சத்ய சாலிவி நீவே"

தூக்கத்தை விட்டு அழகாக தம்புரா வைத்துக் கொண்டு தெளிவான மனத்துடன் ஸுஸ்வரத்துடன் முறை தவறாமல் பஜனை செய்யும் பக்தர்களை உண்மையாகக் காப்பாற்றும் ராமனே, உன்னை எப்படி மறப்பேன்."

இன்னொரு இடத்தில் கூறுகிறார்.

'பாகவதுலு கூடி பாகுக கன, நய
ராகமுலசே தீபாராதனமு ஒனரிஞ்சி"

"பாகவதர்களுடன் கூடி அழகாக கன-நய ராகங்களைப் பாடி தீபாராதனை செய்வதை நான் தரிசிக்கிறேன்." இந்த கலியுகத்தில் இம்மாதிரியாக பஜனை செய்து மோக்ஷமடைந்தவர்கள் பலர். அவர்களுக்குள் "போதேந்த்ரர்" என்பவர் ஒருவர். இவரும் ஸந்யாஸியாக இருந்து பாகவத முறையைப் பின்பற்றி நாம ஸங்கீர்த்தனம் செய்து ஜீவஸமாதியடைந்தவர். நாராயண தீர்த்தர், ஸதாசிவ ப்ரம்மேந்திரர் முதலானவர்களும் நாமஸங்கீர்த்தனம் செய்து இறைவனை அடைந்தவர்கள்.

காஞ்சிபுரத்தில் மண்டன மிச்ர அக்ரஹாரத்தில் வசித்து வந்த கேசவ பாண்டுரங்கர் என்பவருக்கும், ஸ்ரீமதி ஸுகுணா என்ற அம்மையாருக்கும் தவப்புதல்வராக போதேந்த்ரர் பிறந்தார். இவருக்கு முதலில் வைத்த பெயர் புருஷோத்தமன். தாய், தந்தையர்கள் ஒரு நாள் புருஷோத்தமனை அழைத்துக்கொண்டு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடத்தில் அலங்கரித்த 58வது பீடமாகிய ஆத்மபோதரை நமஸ்கரிக்கச் சென்றார்கள். ஸ்வாமிகள் சிறுவனை அழைத்து முதுகில் தடவிக் கொடுத்து அனுக்ரஹித்தார். பிறகு தாய், தந்தையர்களிடம் 'இந்தச் சிறுவன் மகா புத்திசாலியாக இருப்பான். ஆகையால் இவனை நன்கு படிக்க வைக்கவும். இவனுடைய பராமரிப்பு சிலவுகளை மடமே யேற்றுக்கொள்ளும்' என்று கூறி அனுக்ரஹித்து அனுப்பி வைத்தார், புருஷோத்தமன், மடத்து சிலவிலேயே வேதம், சாஸ்த்ரம் முதலியவைகளை நன்கு கற்றுத் தேர்ச்சி பெற்றான். ஆனாலும் சிறுவயதிலேயே எல்லாவற்றிலும் பற்றற்றவனாகவே காணப்பட்டான். இப்படி பிரம்மசாரியாக இருந்தபோது காசி க்ஷேத்ரத்திற்குப் புறப்பட்டு விட்டான். அங்கே ஸ்ரீ காமகோடி பீடத்து ஸ்வாமிகளைச் சந்திக்க நேர்ந்தது. புருஷோத்தமன் சிறுவயதில் மடத்தில் ஸ்வாமிகளால் அனுக்ரஹிக்கப்பட்டமையால் புருஷோத்தமனுடைய சாஸ்த்ர பயிற்சியும், ஒழுக்கமும், வசீகரத்தோற்றமும் ஆத்ம போதரைக் கவர்ந்தது. புருஷோத்தமனும் ஸ்வாமிகளிடத்தில் தன் விருப்பத்தைக் கூற, ஸ்வாமிகள் நினைத்தபடி மடத்திற்கு வாரிசாக ஸந்யாஸதீக்ஷையை அருளினார். அன்றைய தினத்திலிருந்து புருஷோத்தமன "போதேந்த்ரர்" என்ற பெயருடன் விளங்கினார். பின்னர் குருவும, சிஷ்யனும் தென்னாட்டைக் குறித்துப் புறப்படலானார்கள். அவர்கள் இருவரும் சிறிது காலம் காஞ்சியில் சங்கரமடத்தில் தங்கியிருந்தனர். போதேந்த்ரர் காசியிலிருந்து திரும்பி வரும் வழியில் ஜகந்நாத க்ஷேத்ரமாகிய "பூரி" என்ற க்ஷேத்ரத்தில் வசித்து வந்த ஸ்ரீ லக்ஷ்மிகாந்த் கவியினால் இயற்றப்பட்ட "நாமகௌமுதீ" என்ற நூலைத் தன்னுடன் எடுத்து வந்திருந்தார். அங்கே தங்கியிருக்கும்போது பல நூல்களைச் செய்தார். அவை யாவன :-

1) நாமாம்ருதரஸோதயம்
2) நாமரஸாயனம்
3) நாம ஆர்யோதயம்
4) நாமரங்கம்
5) நாமார்ணவம்
6) ஹரிஹரபேததிக்காரம்
7) ஹரிஹராத்வைத பூஷணம்
8) மூர்த்த ப்ரம்ம விவேகம்

ஞானகுருவாக வழிபட்டு பல தோத்திரங்களை இவர் மீது செய்தார்.

திருவிடைமருதூருக்குக் கிழக்கே (மூன்று கிலோ மீட்டர் தூரத்தில்) காவேரி (வீரசோழன் நதி) கரையில் அமைந்த கோவிந்தபுரம் என்னும் கிராமத்தை அடைந்தார். அங்கு ஒரு நாள் தெருவில் ஆற்றுமணலில் சிறுவர்கள் விளையாடிக்கொண்டிருந்தார்கள். அங்குச் சென்றபோதேந்த்ரர் சிறுவர்களைப் பார்த்து 'ஹே! சிறுவர்களே!! என்னை மணலில் புதைத்து விட்டு விளையாடுங்கள். என்றார். அவர்களும் அப்படியே செய்தார்கள். அப்போது போதேந்தரைத் தேடி சிஷ்யர்கள் வர அவர்களைப் பார்த்து சிறுவர்கள் நடந்ததை அப்படியே சொன்னார்கள். உடனே சிஷ்யர்கள் அந்த மணலைத் தோண்டி பார்க்கும்போது ஸ்வாமிகள் ஜீவஸமாதி அடைந்து விட்டார் என்பது அறிந்தார்கள். உடனே அங்கேயே பிருந்தாவனம் எழுப்பி ஆராதனை முதலியவைகளைச் செய்தார்கள். இன்றும் அங்கே ராமநாமம் கேட்கும்.

அவர் செல்லுமிடமெல்லாம் ராமநாமமும், கோவிந்தநாமமும் ஒலித்துக் கொண்டே இருந்தன. அக்காலத்தில் நூற்றுக்கணக்கான சிஷ்யர்கள் ஸ்ரீ போதேந்தரரைப் பின்தொடர்ந்தார்கள். தென்னாட்டில் பக்தி மார்க்கம் உச்சகட்டம் அடைந்திருந்தது. இவ்விதம் சோழ நாட்டில் சஞ்சரித்துக் கொண்டு (கி.பி.) 1692 பிரஜோத்பத்தி வருஷம் புரட்டாசி மாதம் கோவிந்தபுரத்தில், நிர்விகல்ப சமாதியடைந்தார்

அம்மகானது ஆராதனை மகோத்ஸவமானது ஒவ்வொரு ஆண்டும் புரட்டாசி மாதம் பௌர்ணமிக்கு அடுத்த மகாளய பக்ஷத்தில் யதிமகாளயம் என்று கூறப்படும் துவாதசிதிதியில் கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டும் புரட்டாசி மாத பௌர்ணமியன்று ஆராதனை உத்ஸவம் ஆரம்பமாகி நடைபெறும்.



தலசயனப் பெருமாள் கோவில் மாமல்லபுரம்.
—எம். ராஜகோபாலன், சென்னை.

இவையாவும் வடமொழியில் இருக்கின்றன. தான் செய்த நூல்களைத் தன் ஆசார்யனிடத்தில் காண்பித்து ஆசி பெற்றார். மேலும் ஸ்ரீ ஆதிசங்கரர் எழுதிய "ஆத்ம போதம்" என்ற பிரகரண க்ரந்தத்திற்கு "பாவப்ரகாசிகா" என்ற உரையையும் எழுதியுள்ளார்.

இருவரும் ராமேச்வரம் செல்ல விரும்பிப் புறப்பட்டார்கள். தென் பெண்ணை நதிக்கரையில் சஞ்சாரம் செய்து கொண்டிருக்கும் போது வடவாம்பலம் என்னும் இடத்தில் ஆத்ம போதர் நிர்விகல்பஸமாதி அடைந்தார். சீடரான போதேந்த்ரர் குருநாதருக்குச் செய்ய வேண்டிய மஹா பூஜை முதலியவைகளைச் செய்து முடித்துக் கொண்டு தென்னாட்டு யாத்ரையைத் தொடங்கினார். ஆத்ம போதசருக்குப் பிறகு காஞ்சீ மடத்தை அலங்கரிக்கும் ஸ்வாமிகளாக போதேந்த்ரர் நியமிக்கப்பட்டார். போதேந்த்ரர் 59-ஆவது ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் ஆசார்யராக அலங்கரித்தார்.

போதேந்த்ரர் ராமேச்வரம் சென்று அங்கு ஸ்ரீ ராமநாதஸ்வாமியைத் தரிசனம் செய்து கொண்டார். பின்பு ஜம்புகேச்வரம் என்னும் திரு ஆனைக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி அம்பிகையின் தாடங்கங்களை (காதணி) ஜீர்ணோத்தாரணம் செய்து மறுபடியும் பிரதிஷ்டை செய்தார்.

ஸ்ரீபோதேந்த்ரரின் மனம் பிற்காலத்தில் மக்களிடையே பக்திமார்க்கத்தைப் பரப்புவதில் ஈடுபட்டது. ராமேச்வரத்திலிருந்து திரும்பி வருகையில் போதேந்த்ரர் திருஇடைமருதூர் என்னும் மத்யார்ஜுன க்ஷேத்ரத்தில் வசித்து வந்தார். அவ்வமயம் திருவிடைமருதூருக்கு அருகாமையிலிருக்கும் திருவிசைநல்லூர் (சாஹஜிபுரம்) என்ற கிராமத்தில் வசித்து வந்த ஸ்ரீதர வெங்கடேச்வரர் என்ற மகான் ஸ்ரீபோதேந்த்ரரை

தொடர் கவிதை

# திருவேங்கட நூற்றந்தாதி

## நேரிசை வெண்பா

செயல்படா சிந்தையில் சேரும் மருந்து
வியன்மலை நிற்கும் மருந்து—புயல்வேக
மன்பதைக்குள் நின்னை மறந்திடின் வேங்கடவா
என்னபயனோ இருந்து.

இருந்த திருவை இடித்த முனியை
பொருந்த அழைத்து பதத்தை—திருந்த
வருடித் திகைத்திட வைத்த மலையன்
பெருமைதனக் குண்டோ புகல்?

புகல விளிக்கும் பெருநாமம் நாவில்
திகட்டா தினிக்கின்ற தேனாம்—அகலா(து)
இருக்கின்ற ஆள்வினையும் இற்றுவிடும் அந்தத்
திருமலையான் நாமத் திறன்.

திறவுகோல் வாழ்வின் தெளிவிற்கு அன்பின்
உறவுகோல் ஆகிய ஒண்மால்—பிறவியைத்
தூவிடும் பற்றெல்லாம் தீரா துயர்கொளல்
கோவிந்தா என்றால்கண் கூடு.

கூடுகளை வாய்ப்பவன்அக் கூடுகளில் வாழ்பவன்
கூடுகளைக் காத்துப்பின் காய்பவன்—கூடுகளைக்
கூடுகின்ற கூடாவன் கேடுகளைச் சாய்ப்பவன்ஏழ்
கூடுமலை கூடிநிற்குங் கோ.

கோவினைத் தாக்கக் குறிகொண்ட கோவினைக்
கோவுறை கோதில்லான் கோவிந்தன்—கோவினால்
கோவருள் கூட்டிதான் கோடினான்அக் கோபாலன்
கோதெரியும் கூடினார்க் கே.

கூடாதோர் காமத்தால் கூடாநோய் கூடிட
வாடி உடலலைந்த வேதியன்—தேடிநின்
வெற்பேறி பெற்றான் வனப்பெண்ணில் வேங்கடவா
சொற்பமா நின்றனின்சீர்.

சீர்வேண்டிப் போர்தன்னில் சீர்மாலை ஓர்ந்திட்ட
தேர்வேந்தன் கார்வண்ணன் சூர்திகிரி—நீர்சங்கம்
நேயத்தால் தந்துவென்றி நாட்டிடச் செய்திட்ட
நாயகனாம் ஆயனையே நம்பு.

நம்புவார் நாடுவார் நாமம் நவில்வார்பொன்
அம்புயத் தாளினை ஆய்ந்திடுவார்—எம்பிரான்
தங்கிடும் எங்கிலும் தோய்ந்திடுவார் அன்பினார்
மங்கிலா மாந்தரா வார்.

வார்கடல் தன்மையில்கார் வானின் ஒலிதனில்
ஆர்எரிச் சூட்டின் அமைப்பினில்—பார்பொறைத்
தன்மையில் காற்றின் திடத்தினில் போந்தவன்
என்னுயிர் ஊர்நத இறை.

இறைவன் தேடிடில் ஏற்றழி வில்லா
இறையெனத் தோன்றும் இறைவன்—உறைகண்
குனித்திடார் ஏத்திடும் கூத்தனே பாரில்
கனிவாய்க் கனிர்த கனி.

கனியுயிர் வாழ்ந்திடும் காயம் எவையும்
தனியிறை ஊடும் தவிசே—நனிசீர்நல்
மேடமாய் யாக்கை வளைத்தான் மலையினில்
பாடவம் தோற்றுவான்காண் போம்.

போமிடம் வைகுந்தம் பேசுமின் பூவுலகீர்
வாமனன் தேசினை வாயாற—நாமலரான்
நீள்இயம் ஊர்ந்தானை நேர்ந்த திருமார்வன்
ஆள்துயர் ஓட்டும் அணு.

அணுவாய் அணுவில் அடையும் கருவாய்
அணுகக் குவிக்கும் அருளாய்—அணியாய்
மிதுனத்தார் தேவாய் மறையாய் உறையோய்
பதம்நினைதைப் பற்றலே பேறு.

பேறானான் ஓர்கடகம் போந்துபின் பஞ்சவர்க்கோர்
ஆறானான் பன்னுருவாய் ஆர்ந்தெழுந்தான்—சாறாகும்
வாய்மொழியைப் பற்றுமின் வீறாவீர் என்றுநின்ற
பாய்பபின்றான் உள்ளல் பயன்.

பயனில்லை மற்றைப்புகல்கின் எனவே
வயமான பாலனை வேய்ந்து—புயலெனச்
சிம்மமாய் பாய்ந்தெழுந்த தன்மலை வேங்கடப்
பெம்மானே உண்மைப் பரம்.

பரந்து விரிந்து பிரிந்து படைத்து
புரந்து பிணைந்து பறைத்து—சுரந்நமா
மென்கருணை யாய்விரி மாலினை வாழ்த்துகரி
கன்னிடும் அன்ன கடுகு.

கடுகிடும் விண்கல் ககனம்விரை தற்போல்
விடுபெறும் வாழ்வுதன் வேகம்—மடுவந்து
ஆனையை மீட்டான் அருளினை விட்டினை
தானளிப் பான்துலாமர்ய்த் தேர்ந்து.

(44-ம் பக்கம் பார்க்க)

# சீரிய சிங்கமும் சிங்காசனமும்



பதவியில் அமருபவர்களுடைய பண்புகளைப் பொறுத்தே பதவிக்குப் பெருமை கிடைக்கும் என்ற கருத்தை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்க மாகும்.

வீரமுள்ள சிங்கம் தன் பேடையுடன் படுத்துத் தூங்குகிறது - மழைக் காலத்தில், மலைக் குகையில். தூக்கம் நீங்கி உணர்வு பெற்றவுடன் நெருப்பென உஷ்ணமாகப் பார்க்கிறது, பகைப் பிராணிகளிடம் கொண்ட சீற்றம்போல். தன்னுடைய வாசனை பொருந்திய பிடரி மயிர் சிலிர்க்கும்படி எல்லாத் திசைகளிலும் அசைந்தாடி உடம்பை சிலிர்க்கிறது. பின் உடம்பை நீட்டி நெருக்கி கம்பீரமாக நிமிர்ந்து சோம்பலை முறிக்கிறது. கர்ஜனை செய்து கொண்டு வெளியில் வருகிறதென்ற பொருளில் சிங்கத்தின் இயற்கை இயல்புகளைக் கூறுகிறான் ஆண்டாள்.

“மாரி மலைமுழைஞ்சில் மன்னிக்
கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து,
வேரி மயிர்பொங்க எப்பாடும் போந்
துதறி,
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு,

அந்தச் சிங்கம் குகையிலிருந்து வெளியே வருவதைப்போல (நப்பின்னை பிராட்டியுடன் படுத்துக் கொண்டிருந்த ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து) ‘காயாம் பூ போன்ற நீல நிறமுடைய பூப்போன்ற திருமேனியையுடையவனே! எங்கள் காரியத்தை முடித்துக் கொடுக்கும் கடமையையுடைய நீ, உன் திருப்பள்ளியறையிலிருந்து புறப்பட்டு வர வேண்டும். சிறந்த வேலைப்பாடுகளுள்ள சீர்மை பொருந்திய இந்த அரியணையில் அமர வேண்டும். நாங்கள் உன்னிடம் வந்த காரியத்தை விசாரித்து நிறைவேற்றி அருள வேண்டும்’ என்று மேலும் கூறுவாள் ஆண்டாள்.

“போதருமா போல நீ பூவைப்பூ
வண்ணா, உன்
கோயில் நின்று இங்ஙனே போந்
தருளி, கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து, யாம்
வந்த
காரிய மாராய்ந் தருளேலோ ரெம்
பாவாய் ”

(திருப்பாவை—23)

அறந்தலை நிறுத்த அவதாரமெடுத்த ஸ்ரீ கிருஷ்ண பகவானை, சிங்கத்துடன் ஒப்பிட்டுக்கூறக் காரணம், சிங்கத்தின் குண நலன்களைப் பெற்றவனே அறந்தலை நிறுத்த முடியும் என்பதைக் குறிப்புணர்த்துவதற்காகவே யாகும்.

தடமாடிச் சேற்றில் விழுந்து மீள முடியாமல் தத்தளிப்பவனைப் பார்த்து, திறமையுள்ளவன் குதித்து அவனை மீட்பதைப்போல், கர்ம வினையால் பிறவிப் பெருங்கடலில் விழுந்து தத்தளித்துக்கொண்டிருக்கும் ஜீவான்மாக்களை, தன் விருப்பத்தினால் சேற்றில் குதித்த திறமையாளனைப்போல், பகவான் தன் விருப்பத்தினால் மானுடப் பிறவியில் பிறந்து அறநெறிகளைக் கடைப்பிடித்து வாழ்ந்து, ஜீவான்மாக்களைக் கரை சேர்க்கிறான். அதாவது முக்தி அளிக்கிறான்.

‘எனது பிறவிக்குக்காரணம் எனது கருமமல்ல; எனது விருப்பத்தினால் ஆச்சர்யமான நிலைத்த ஞான உடம்பினைப் பெற்று என்னை நானே தோற்றுவித்துச் கொள்கிறேன்’ என்று கீதையில் (அத். 4 சுலோ. 6) கூறிய படி (ப்ரக்ருதிம் ஸ்வாமிதிஷ்டாய ஸம்பவாம் ஆத்ம மாயயா) பகவான் பிறவி எடுக்கிறான். அவனே அவன் ஆத்மாவைப் படைத்துக் கொள்கிறான். (ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்)

அவன் விருப்பு வெறுப்பிற்குட்பட்ட கர்ம வினையால் பிறந்தவனல்ல. அதனால் பற்றற்ற நிலையில் செயல்படுகிறான்.

பழுக்கக் காய்ச்சிய இரும்புக் குண்டும் அதிலுள்ள அக்னியும் பார்ப்பதற்கு ஒன்றுபோல் தோன்றும். ஆனால் இரும்புக்குண்டு வேறு; அதிலுள்ள அக்னி வேறு.

---

ஸ்ரீவில்லிபுத்தூர் A. ஸ்ரீராமுலு தேசிகன்
புதுச்செந்நெல்குளம்.

---

அதுபோல் அறிவுள்ள, அறிவற்ற பொருள்களில் இறைவன் அந்தர்யாமியாய்ப் புகுந்து வியாபித்து ஒன்றுபோல் தோன்றினாலும் அந்தப் பொருள்கள் வேறு. அவைகளில் ஊடுருவி நிற்கும் இறைவன் வேறு. அவைகளில் ஒட்டாமல் செயல்படுவான். அந்நிலையே பற்றற்ற நிலையாகும். அந்நிலையினை சிங்கத்தின் பிடரி மயிரின் வாசனையோடு ஒப்பிடுகிறான் ஆண்டாள்.

‘கொத்தலர் பூங்குழல் நப்பின்னைக் கொங்கை மேல்’ ஸ்ரீ கிருஷ்ணன் படுத்துக்கிடந்தாலும், மனை

# விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத் தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

முழைஞ்சில் மன்னிக் கிடந்து உறங்கும் சிங்கம் விடியலின் உணர்வை அறிவுற்றுத் தன்னை விடுவிக்காத பேடையை நெருப்பெனப் பார்ப்பதைப்போல், இவன பார்க்கிறான். அவள் இவனை விடுவித்துவிடுகிறாள். ஜீவர்களின் கர்மங்களைத் தீர்ப்பதற்காக மனம் நீங்காத தாமரைப் பூவிலிருக்கும் பிராட்டியல்லவா, அவள்? என்கிறார் ஆழ்வார். "வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே."

வேண்டுதல் வேண்டாமையிலாத ஸ்ரீ கிருஷ்ணன் பகைவர், அயலார், நண்பர் என்ற முத்திறத்தாரிடமும் குற்றங்குறைகளைக் கண்டபோது தம்மவர் என்ற சார்பும், பகைவர் என்ற வெறுப்பும், அயலார் என்ற உதாசீனமும் போன்ற தீய குணங்களை, விழிப்புணர்வு பெற்ற சிங்கம் தன் பேடையின் மீது வைத்த பற்றை, உடம்பை சிலிர்த்து சோம்பலை முறிப்பதைப்போல், முறித்து தெளிவான அறிவோடு அரியனை ஏறுகிறான்.

அந்த அரியணை அறம், ஞானம், வைராக்கியம், ஆணையிடும் சக்தி என்ற நான்கு கால்களைக் கொண்ட சீர்மை பொருந்திய அரியணை என்பதை உணர்ந்து அதற்கேற்ப நிறைந்த மதியுடன் செயல்படுகிறான். முன்னோக்கி நடக்கும் சிங்கம் அடிக்கடி தான் வந்த பாதையைப் பின்னோக்கிப் பார்ப்பதைப் போல், அவன் செய்த செயல்களை, அவதார நோக்கத்தை நினைத்துப் பார்க்கிறான். அதனால் அகங்காரமற்ற அன்பு உள்ளத்தோடு செயல்படுகிறான். தராசு தன்னிடமுள்ள பொருள்களின் தன்மையை நோக்காது, குணங்குறைகளை நடுநின்று நோக்குவதைப்போல், தான் வசிக்கும் பதவியில் அமர்ந்து நோக்குகிறான்.

'தர்க்கம் செய்கின்றவர்களுடைய உண்மை அறிவதற்கான தர்க்கம் நான்' என்றும் (10-32) 'மிருகங்களில் சிங்கமாக இருக்கிறேன்,' என்றும் (10-30) கீதையில் கூறியதற்கேற்ப வாழ்வில் நடத்திக் காட்டினான்.

சிங்கத்தின் சிறப்பான இயல்புகள் அறிவுள்ள, அறிவற்ற வேறு எந்த உயிர் வாழிகளுக்கும் இல்லையாதலால் அது மிருகங்களுக்கெல்லாம் அரசனாக இருக்கும் தகுதியைப் பெற்றுள்ளது. மானுட இனம் சிங்கத்தின் இயல்புகளைப் பெறவேண்டுமென்று ஸ்ரீ நரஸிம்மாவதாரம் அறிவுறுத்தும். விருப்பு, வெறுப்பிற்குட்பட்ட, ஆழ்வாரால் 'அழுக்கு மானுட சாதி', என்று அழைக்கப்பட்ட மானுடப் பிறவியில் தோன்றிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அந்த சிங்கத்தின் இயல்புகளெல்லாம் ஒருங்கே அமைந்தமையால் அவனை 'சிங்கம்' என்று மட்டும் அழைக்காமல், 'சீரிய' என்று ஓர் அடைமொழி சேர்த்து, 'சீரிய சிங்கம்,' என்று விளித்தாள் ஆண்டாள்.

பதவியில் அமருபவர்களுடைய பெருமையைப் பொறுத்துத்தானே, பண்புகளைப் பொறுத்துத்தானே அந்தப் பதவிக்குப் பெருமை கிடைக்கும். எனவே சீரியசிங்கம் அமரும் ஆசனத்தை 'சீரிய சிங்காசனம்' என்று விளித்தாள் ஆண்டாள்.

'இமய மலையையொத்த இந்தச் சித்ரகூட மலை மிகப் பெருமைப் பெற்றது எதனால்? குபேரன் நந்தவனத்தில் இருப்பதுபோல் இராம பிரான் இங்கு வசிப்பதால்', என்ற ஸ்ரீ ராமாயண வசனம் (2-98-12) ஈண்டு நினைவிற்கொள்ளத் தக்கதாகும்.

'தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்கு, தம்மையே யொக்க அருள் செய்வார்' என்ற திருமங்கையாழ்வாரின் கொள்கைப்படி, சிங்கத்தின் இயல்புகளைப் பெறுவதற்கு ஆண்டாள் அந்த சீரிய சிங்கத்திடம், 'யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்', என்று பிரார்த்தித்தாள். இராமாயணத்தில் 'வாலிக்கு ஆராய்ந்து அருள் செய்தான் இராம பிரான்', என்கிறார் கம்பநாட்டாழ்வார்.

துணியில் கறையானது நன்கு அழுத்தமாகப் பட்டுவிட்டால் நல்ல சோப்பைப் போட்டு நீக்குவதைப் போல், 'செய்யும் தொழில்கள்' என்ற துணியில் விருப்பு வெறுப்பாலேற்பட்ட 'வாசனை மூட்டைகள்' என்ற மன அழுக்கைப் போக்குவதற்கு, அத்தொழில்களைப் பயன் கருதாதுச் செய்து, 'பகவத் கைங்

கர்யம்' என்ற சோப்பு போட்டுக் கழுவ வேண்டும். அப்படிக் கழுவும் பொழுது சிங்கத்தின் இயல்புகளைப் பெறுவான். பழைய நினைவுகளும் வருங்கால எதிர்பார்ப்புகளும் சேர்ந்து உருவாகும். அகந்தை என்ற மருட்சியிலிருந்து தப்பித்து இறைவனிடம் சேர்வது மானுடப் பிறவி முயற்சியோடு செய்ய வேண்டிய காரியமாகும். அதற்கு கிருஷ்ணன் அருள் கிடைப்பதற்கு ஆண்டாள், 'யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்' என்று பிரார்த்திக்கிறாள்.

மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் சிங்கத்தைப்போல், வாலி, தன் மனைவி தாரையுடன் ஏகாந்தமாகப் படுத்துக்கொண்டிருந்தான். இராமனுடைய பக்கபலத்தோடு சுக்ரீவன் யானை முழங்குவதுபோல் முழங்கி வாலியைப் போருக்கு அழைத்தான். சுக்ரீவனின் ஓங்கிய ஆரவார சப்தத்தை சிங்கமாகிய வாலியின் காதுகள் கேட்டன வென்று கம்பநாட்டாழ்வார் கூறுகிறார். "மால் பெருங் கட கரி முழக்கம் வாளி அரி ஏற்பது செவித்தலத்து என்ன ஓங்கிய ஆர்ப்பு ஒலி கேட்டனன்".

தோற்றத்திலும் குரல் ஓசையிலும் சிங்கத்தை ஒத்திருந்தாலும் அவனது உள்ளத்தளவில் ஒரு குரங்கு வாலியாகவே இருந்தான். சிங்க வாலியாக இருக்கவில்லை. இருந்திருந்தால் தன்னை அடைக்கலம் அடைந்த தம்பி சுக்ரீவனை ஓடி ஓடி அடித்து விரட்டமாட்டான். அவன் மனைவி ருமையைக் கவரமாட்டான். உடல் வலிமையால் ஏற்பட்ட அகங்காரமே அவனை உணரவிடாமல் தடுத்து விட்டது. அதனால்தான் திருமழிசையாழ்வார் இராமபிரானைத் துதிக்கும் பொழுது, 'வாலியினுடைய அகங்காரத்தை ஒழித்த இராமபிரான் என் மனதிலிருக்கிறான்', என்று துதித்தார். 'வாலி மதனழித்த வில்லாளன், என் நெஞ்சத்துளான்'. "பஞ்சின மெல்லடியாள் பங்கன் பாதுக மல்ல யாவும் அஞ்சலித்து அறியாச் செங்கை" என்றும், "சூலியின்னருள் துறையின் முற்றினான்" என்றும் வாலியினுடைய சிவ பக்தியைப்பற்றிக் கூறப்படுகிறது. "எட்டு மாதிரத்து இறுதி நாளும் உற்று, அட்டமூர்த்தி தாள் யணியும் அன்பினான்", என்று வாலியினுடைய நித்திய அனுட்டானம் பற்றிக் கூறப்படுகிறது.

அதி தீவிரமான முறையில் பக்தி செலுத்தி வந்த வாலியை குரங்கு இயல்பிலிருந்து நீக்கி சிங்க இயல்புகளை உண்டாக்குவதற்காக இராமபிரான் அவனைத்தேடிக் கிட்கிந்தை மலைக்கு வந்தார். மறைவிலிருந்து கொண்டு அம்பு மூலம் தன்னுடைய நாமத்தை அவன் உடலில் செலுத்தினார். ஆத்திரத்தை உண்டாக்கி அவனைத் தன்னிடம் தெளிவான கேள்விகளைச் கேட்கும்படிச் செய்தார். அவைகளுக்குத் தகுந்த பதில்கள் அளித்து அவனது அகங்காரத்தை நீக்கினார். உயிர் விடும் நேரத்தில் தெளிவான அறிவை உண்டாக்கினார். 'ஆவி போம் வேலை வாய் அறிவு தந்து அருளினாய்', என்று அவனே இராமபிரானைப் போற்றுகிறான்.

இராமபிரானுக்குக் காட்டிக் கொடுத்து தன் உயிரை வாங்கிய சுக்ரீவன் செயலை மறக் கருணையாகவே கருத்தில்கொண்டு அவனைப் போற்றுகிறான் வாலி. 'வெற்றரசு எய்தி எம்பி வீட்டரசு எனக்கு விட்டான்', என்று கூறுகிறான். இக்கூற்றானது, அகங்காரம் நீக்கப்பட்ட அவனது உள்ளத்தைக் காட்டும்.

இராவண வதத்திற்காகவே பிறந்த குரங்கு வாலி, தான் வந்த காரியத்தை உடல் வலிமையாலேற்பட்ட அகங்காரத்தால் மறந்தான். அதே ராவணனுடன் அக்னி சாட்சியாக சிநேகம் செய்து கொண்டான். அவன் செயலை ஆராய்ந்து அவனை சிங்க வாலியாக்கி அவனது சொரூபத்தை உணரும் அறிவினைக் கொடுத்து, வீடுபேறளித்தான் சீரிய சிங்கமாகிய ராமபிரான்.

அந்தச் சீரிய சிங்கமாகிய ராமபிரான், கோப்புடைய சீரிய சிங்காசனமாகிய திருவேங்கட மலையில் அமர்ந்துள்ளான் என்கிறார் ஸ்ரீ நம்மாழ்வார்.

'என் அப்பனே! குளிர்ந்த வேங்கட மலையில் நிற்பவனே! இலங்கை அழித்தவனே! மராமரம் ஏழிலும் ஊடுருவ ஓர் அம்பைத் தொடுத்த வில்லுடையவனே! கொத்தாக திருத்துழாய் மாலை தரித்தவனே! அமுதம் போன்ற நீ, என்னுள்ளே உன்னைக் குழைத்துவிட்டாய். வானவர் தலைவனே! என்னைவிட்டு இனி நீ எங்குப் போகின்றாய்?' என்று இராமபிரானாக எழுந்தருளியுள்ள திருவேங்கடமுடையானிடம் வினாவும் எழுப்புகிறார் ஸ்ரீ நம்மாழ்வார்.

எந்தாய்! தண் திருவேங்கடத்துள் நின்
றாய்! இலங்கை செற்றாய், மராமரம்
பைந்தா ளேழுருவ ஒரு வாளி கோத்த
வில்லா,
கொந்தார் தண்ணந் துழாயினாய்!
அமுதே உன்னை என்னுள்ளே
குழைத்தவெம்
மைந்தா, வானேறு! இனியெங்குப்
போகின்றதே! (2-6-9)

வந்த காரியத்தை மறந்து, அகங்காரத்தால் செயல்பட்டுக்கொண்டிருந்த வாலியை தன்னுணர்வு ஏற்படச்செய்த இராமபிரானை திருவேங்கட மலைக்குச் சென்று வழிபட்டால், வழிபடுபவர்களுடைய அகங்காரத்தை நீக்கி தன் சொரூப அறிவைக் கொடுத்து, வந்த காரியத்தில் இறங்கும்படிச் செய்வான். ஏழு மராமரங்களை அம்பெய்து வீழ்த்தி, சுக்ரீவனுக்கு நம்பிக்கையுண்டாக்கிய திருவேங்கடமுடையான், தன்னிடம், வந்து பிரார்த்தனை செய்பவர்களுக்குத் தன்மீது பூர்ண நம்பிக்கையை ஏற்படுத்துவான். தாங்கள் வகிக்கும் பதவிகளுக்கேற்ப பண்புகளை உண்டாக்குவான். தம்மைப்போல் சீரிய சிங்கமாக்கி சீரிய சிம்மாசனத்தில் அமரச் செய்வான். அமுதமாகி அடியார் உள்ளத்தில் தன்னைக் குழைத்துக்கொண்டு நிலைத்த மதியில் செயல்படச் செய்வான். அதற்குத் திருவேங்கடமலை சென்று அவனைப் பிரார்த்திப்போமாக! ★

# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்தி பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில் வ்யூ பாதிக் குடில்கள், சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) ரூ. 15/-

எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது ரூ. 25/-

எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 25/-

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி. பி. சி. மூன்றாவது வரிசை முதலியன

டி. பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 60/-

வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 ரூ. 70/-

எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 15/-

ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) ரூ. 30/-

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதியில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் ரூ. 50/-

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக் குடில்கள் ரூ. 70/-

சிறப்பமைப்புக் குடில்கள் ரூ. 100/-

எச். ஆர். ஜி. குடில்கள் ரூ. 250/-

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

ஒரு அறைத்தொகுதிக்கு ரூ. 250/-

ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1500/-

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

முதல் தளத்தில் பெரிய அறைத்தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில அறைத்தொகுதி (ஒன்று ரூ. 750/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500-/

ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-

ஸ்ரீநிவாசா நிலையம்
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

வித்யா சதன்
பெரிய அறைத் தொகுதி ரூ. 750/-
,, மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-

கோதாவரி சதன்
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி. தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண். 272, 260, 266, 267 ரூ. 100/-

டி.பி. குடில் எண். 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-

ரூயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-

ஸ்ரீ சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித் தலைவர், (ஆர்). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள் :-
* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால், நிர்ணயிக்கப் பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள்:

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன் கூடிய இட வசதிகள் உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை. நாற்காலிகளுடன் கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-

கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103.

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :

அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில் உள்ளது)

பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத் தொகுதி ரூ. 40/-

திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 20103.

# திருவேங்கடத்தெம்பெருமான் - உபய விபூதி நாயகன்

திரு. எஸ். திருவேங்கடத்தான்
சென்னை—64.

ஸ்ரீய: பதியான ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசங்களில் கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்ற திவ்ய தேசங்களுக்குத் தனி ஏற்றம், ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் கொடுக்கப்பட்டு இருக்கிறது. இத்திவ்ய தேசங்களான திருவரங்கம், திருவேங்கடம், காஞ்சீபுரம் முறையே நம்மால் போக மண்டபம், புஷ்ப மண்டபம், தியாக மண்டபம் என்று சிறப்பித்துப் போற்றப்படுகின்றன. இம்மூன்றில், திருவரங்கத்துக்கு இணையாக திருவேங்கடத்தை மயர்வறமதிநலம் அருளப்பட்ட ஆழ்வார்களும், நம் பூர்வாசாரியர்களும் ஈடுபட்டு மிகவும் அனுபவித்து இருக்கிறார்கள். இதைத்தவிர த்வைத, அத்வைத ஆசாரியர்களும், தியாக ப்ரும்மம் போன்ற பல மஹான்களும், திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைப் போற்றி வழிபட்டு இருக்கிறார்கள். அந்த எம்பெருமானுக்கு உள்ள விசேஷங்களுள் மற்ற எந்த எம்பெருமானுக்கும் இல்லாத சீர்மை, அவன் எழுந்தருளியிருக்கும் இடத்திற்கு உள்ளது என ஆழ்வார்கள் அனுபவித்து இருக்கிறார்கள். அதைக் கொஞ்சம் சுருக்கமாகக் கீழே நாம் அனுபவிப்போம்.

பெரியாழ்வார் திருமொழியில் "சென்னியாங்கு தண் திருவேங்கடமுடையாய்! உலகு தன்னை வாழ நின்ற நம்பீ! தாமோதரா! சதிரா!" என்று நம் எல்லோரையும் வாழ்விக்க திருவேங்கடத்தில்வந்து நமக்குசேவை சாதிக்கிறான் என்று அருளிச் செய்கிறார். அதோடு, அவன் எழுந்தருளியிருக்கும் இடம் மண்ணோரும், விண்ணோரும் சென்று சேவிக்கும்படி ஒரு சந்திப்புபோல் இருக்கிறது என மற்ற ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்து இருக்கிறார்கள். அதுதான் அவனுக்கு உள்ள தனிப்பெருமை.

திருமங்கை மன்னன், சிறிய திருமடலில் "சீரார் திருவேங்கடமே" என அருளிச்செய்கிறார். திருவேங்கடத்துக்கு உள்ள சீர்மை அதாவது சிறப்பு நித்யஸூரிகள், சுரர்கள், நம் போன்ற ஸம்ஸாரிகள் எல்லோருக்கும் ஒக்க முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிற நிலையாயுள்ள ஏற்றம் என்கிறார்கள்.

திருமங்கைமன்னனே, பெரிய திருமொழியில் "கொங்கலர்ந்த" என்ற பதிகத்தில், "என்றும் வானவர் கை தொழும் இணைத்தாமரையடி யெம்பிரான்"—"சூழ்தரும் உலகுக்கெல்லாம் தேகமாய்த் திகழும் மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே" என்று வானவர்களும், 'சகல உலகத்திலும் உள்ளவர்களும் தொழும்படி நிற்கும் திருவேங்கடத்தெம்பெருமானை போய்ச் சேர்' என்று தன்னுடைய நெஞ்சத்திற்கு உபதேசிக்கிறார்.

அடுத்து, திருப்பாணாழ்வார், தம் அமலனாதிபிரானில் அருளியது. "மந்திபாய் வட வேங்கடமாமலை, வானவர்கள் சந்தி செய்ய நின்றான்" சீர்மை மிக்க திருவேங்கடத்தில்

## நித்ய அபிஷேக ஸேவை

யாத்திரிகளின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தானின் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசியமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி." எனும் பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித்தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும். பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி. மீ தொலைவில் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலையிலும் மாலையிலும் இருவேளை அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகிறது.

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

வானவர்களும் ஒருவரை ஒருவர் சந்தித்து, எல்லோருமாக சேர்ந்து எம்பெருமானை வழிபடுகிறார்களாம்.

அடுத்தபடியாக, திருமழிசைப் பிரான், நான்முகன் திருவந்தாதியில், "தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என சுரர்களும், நம்போன்று இவ்வுலகத்தில் உள்ள எல்லோரும் சேர்ந்து போற்றும் திருவேங்கடமே என்று அவன் எழுந்தருளியிருக்குமிடத்தை சிறப்பித்து அருளிச்செய்கிறார். குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த பெருமாள் திருமொழியில் "ஊனேறு செல்வத்து" என்ற பதிகத்தில்

"செடியாய் வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே வேங்கடவா, நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையருங்கிடந்தியங்கும்
படியாய் கிடந்து உன் பவளவாய் காண்பேனே"

என்ற பாசுரத்தில், நம் போன்ற அடியவர்களும், நான்முகன் தொடக்கமான சகல தேவர்களும் கூடித் தொழும் திருமலையில் ஒரு படியாக கிடந்து, அந்த ஆபரணங்களுக்கு அழகு செய்யும் எம்பெருமானின் திருப்பவளவாயை சதா அனுபவித்துக்கொண்டிருக்க வேண்டுமென திருவேங்கடவனிடத்தில் பிரார்த்திக்கிறார்.

நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில்

"கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்குத்
தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே"

என்று மற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்தபடி, வேங்கடத்தெம்பெருமான் நித்யஸூரிகளும் தேவர்களும், நம் போன்ற ஸம்ஸாரிகளும் ஒன்றாக சேர்ந்து தொழும்படி, சேவை சாதிக்கிறான் என்று ஊர்ஜிதம் செய்கிறார்.

ஆக ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்ய ஸூக்திகள் மூலம் நமக்கு, மற்ற எந்த எம்பெருமானுக்கும் இல்லாத சிறப்பு, வானோர்களும், மண்ணோர்களும் சந்தி செய்து அவனை சேவிக்கிறோம் என நிரூபணமாகிறது.

நித்ய ஸூரிகளும், சுரர்களும், முனிக்கணங்களும் சதா விரும்பும் அந்த திருவேங்கடத்தெம்பெருமானான உபய விபூதி நாயகனை, நாம் சேவிக்க, சேவிக்க திகட்டாமல் ஆராவமுதமாக நமக்கு சேவை சாதிக்கிறான். இந்த எம்பெருமான் சேவைக்கு, பரமபதநாதன் சேவை ஈடாகுமா என நமக்கு, அவனைச் சேவிக்கும்போது தோன்றுகிறது. அந்த எம்பெருமானை வழிபடும்போது, நாம் வைகுந்தத்தில் இருப்பது போன்ற உணர்வு நமக்கு ஏற்படுகிறது. அப்படி அந்த திருவேங்கடத்தெம்பெருமானை உள் அன்புடன் சேவித்தால் நமக்கு, இவ்வுலகில் சகல பாக்கியங்கள் கிடைப்பதுடன், நிச்சயமாக பரமபதத்தில் நமக்கு இடம் உண்டு என்பதை நம் சடகோபன் திருவாய்மொழியில், திருவேங்கடமுடையானை சரணாகதி அடைந்து போற்றும் "உலகமுண்ட பெருவாயா" என்ற பதிகத்தில் கடைசீ பலச்ருதி பாசுரமாக அருளிச்செய்ததை நாமும் அனுசந்தித்து ஸ்ரீ திருவேங்கடத்தெம்பெருமானின் நிர்ஹேதுக கிருபைக்கு பாத்திரமாவோம்.

அடிக்கீழமர்ந்து புகுந்து, அடியீர்
வாழ்மினென்றென்றருள் கொடுக்கும்
படிக்கேழில்லாப் பெருமானைப்
பழனக் குருகூர்ச் சடகோபன்,
முடிப்பான் சொன்ன வாயிரத்துத்
திருவேங்கடத்துக்கிவை பத்தும்,
பெரிய வானுள் நிலாவுவரே.

—(பெரியவான்-பரமபதம்)



(12-ம் பக்கம் தொடர்ச்சி)

திருவேங்கடமுடையான் தன்னைச் சரணம் அடைந்தவர்களின் பிறப்பு இறப்புத் துன்பங்களை நீக்கித் திருநாடு அடையும் பேற்றினையும் அருளுவான் என்று கூறுவர் ஆசிரியர் இப்பாசுரத்தில்.

இன்னொரு சிறிய பாடலிலும் திருவேங்கடமுடையானின் திருப்பாதப் பெருமை பேசப்படுகின்றது.

வேத னைத்தகும் விமலன்என
நாதன் வேங்கட நாயகன்
பாதம் அல்லது மற்றுமே
ஏதம் அற்றவர் இதயமே

[வேதன் - நான்முகன்; விமலன்-குற்றம் நீங்கியவன்: ஏதம் அற்றவர்-குற்றம் நீங்கியவர்]

குற்றமற்றவர்கள் சீநிவாசனது திருப்பாதத்தைத் தவிர வேறொன்றையும் சரணமாக் அடையார். இதில் 'வேதனைத் தகும் விமலன்' என்பதால் பரத்துவமும் 'என் நாதன்' என்பதால் சௌலப்பியமும் (விபவம்) 'வேங்கடநாயகன்' என்பதால் அர்ச்சையும் கூறப்பெற்றிருப்பதைக் கண்டு மகிழலாம்.

மற்றும் ஓர் பாடலில் திருவேங்கடமுடையானின் திருவடிப் பெருமை நுவலப்பெறுகின்றது.

சிந்திப் பனவும்
துதிசெய் வனவும்
தெரிசிப் பனவும்
துரிசற் றிடவே
வந்திப் பனவும்
பூசிப் பனவும்
வாஞ்சிப் பனவும்
யாம்செப் புவமால்;
தந்திக் கிமையோர்
பந்திக் களையின்
தாழிக் கருள்கூர்
ஆழிக் கடவுள்
கந்தித் தெழுபூ
வுந்தித் திருவேங்
கடமால் சரணம்
தடமா மலரே (65)

[சிந்திப்பது-தியானிப்பது; துதி-தோத்திரம்: தெரிசிப்பது-காண்பது; துரிசு-குற்றம்; வந்திப்பது-வணங்குவது; பூசிப்பது-ஆராதிப்பது; வாஞ்சிப்பது-விரும்புவது; தந்தி - யானை; பந்தி - வரிசை; அளையின் தாழி-தயிர்ப்பானை; ஆழி-சக்கரம்; கந்தித்து-வாளினை வீசி; உந்தி-கொப்பூழ்; சரணம்-திருவடி]

இதில் திருவேங்கடமுடையானின் திருவடித் தாமரைகள் தியானிக்கத் தக்கவை என்றும் தோத்திரம் செய்யத்தக்கவை என்றும் கண்டுகளிக்கக் கூடியவை என்றும், குற்றங்கள் ஒழியும் பொருட்டு வணங்கத் தக்கவை என்றும், பூசிக்கத்தக்கவை என்றும் விரும்பத்தக்கவை என்றும் பல்வேறு விதமாகச் செப்பி இனியராகின்றார் ஆசிரியர். மூன்றாவது அடியில் குறிப்பிட்ட அளையின் தாழிக்கு வீடளித்த வரலாறு செவிவழிச் செய்தியாகக் கண்ணனைப் பற்றித் தமிழ் நாட்டில் வழங்கி வரும் கதையையொட்டியது. வெண்ணெயைக் களவு செய்து உண்ட கண்ணன் தாயின் பிடிக்குத் தப்பியோடிய போது ததிபாண்டன் அகத்தில் புக்கு ஒளிந்தான் என்றும், அவனைத் ததிபாண்டன் தாழியில் மறைத்துக் காப்பாற்றினான் என்றும் இதற்குச் செய்த நன்றியாகக் கண்ணன் அந்த இடையனுக்கும் அவனது தாழிக்கும் வீடுபேறு அளித்தனன் என்றும் வழங்குவது இக்கதை. இக்கதையைப் பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும் தமது நூலில் (திருவரங்கத்து மாலை -53) குறிப்பிட்டுள்ளார்.

இத்தனைப் பெருமையினையும் சீர்மையினையும் உடைய அரவக் கிரியோனுக்கு ஆட்பட்ட கவிஞர் பெருமான் தன் பெருமிதம் தோன்றப் பேசுகின்றார் தமது 'மறந்தும் புறந்தொழா' நிலையைக் குறிப்பிட்டு.

அன்றுலகம் உண்டுமிழ்ந்த
அகிலசெகற் காரணன்நீ;
எனறுனக்கே யாளானோம்;
இமிழருவி வடமலைவாழ்
மன்றல்கமழ் துளவோய் உன்
வயிற்றுள் எங்களோடுகடைநாட்
சென்றுறைந்து மீளவரும்
தேவரையாம் மதியோமே (11)

[அன்று-பிரளய காலத்தில்; அகிலம்-உலகம்; செகத்காரணன்-உலக முழுவதற்கும் நீயே காரணன்! ஆள் ஆனோம்-அடிமையானோம்; கடைநாள் - யுகாந்த காலத்தில்; சென்று-பிரவேசித்து, உறைந்து-வசித்து; மீளவரும்-பின்பு வெளியில் வருகின்ற; மதியோம் - ஒரு பொருளாக இலட்சியம் செய்யோம்]

"தேவதாந்தரங்களைத் துதியாமல் பரதேவதையாகிய நினக்கே தொண்டு பூண்டு ஒழுகுகின்ற எங்களைக் காத்தருளல் வேண்டும்" என்கின்றார். இந்தப் பாடல், உலகத்தைப் பிரளயத்திலிருந்து எம்பெருமான் உய்வித்தமையைக் கூறி உலகிற்கு உபதேசிக்கும் திருமங்கையாழ்வாரின் திருமொழியையும் (11.6), நம்மாழ்வாரின்,

நளிர்மதிச் சடையனும்
நான்முகக் கடவுளும்
தளிர்ஒளி இமையவர்
தலைவனும் முதலா
யாவகை உலகமும்
யாவரும் அகப்பட;
நிலம் நீர் தீ கால்
சுடர் இரு விசும்பும்
மலர்சுடர் பிறவும்
சிறிதுடன் மயங்க
ஒருபொருள் புறப்பாடு
இன்றி முழுவதும்
அகப்படக் கரந்துஓர்
ஆல்இலைச் சேர்ந்தவெம்
பெருமா மாயனை
அல்லது
ஒருமா தெய்வம்மற்று
உடையமோ யாமே?

—திருவாசிரியம்-7

[நளிர்-குளிர்ந்த; சடையன்-சிவன்; தளிர்ஒளி-தழைத்த ஒளி; இமையவர் தலைவன்-இந்திரன்; விசும்பு-ஆகாயம்; மலர்சுடர் பிறவும்-சந்திரன் சூரியன் முதலிய ஒளியுடைய பொருள்களும்; புறப்பாடு இன்றி-வெளிப்படாதபடி; கரந்து-மறைத்து: மாயன்-ஆச்சரியன்]

என்ற திருவாசிரியப் பாசுரத்தையும் நினைக்கச்செய்கின்றது. இங்ஙனம் முத்தமிழ்க் கவிஞர் 'வண்டமிழ் நூற்க நோற்றேன அடியார்க்கு இன்ப மாரியே' (திருவாய் 10-4-5) என்று நம்மாழ்வார் கூறியவாறு திருவேங்கடமுடையான் மீது 'செவிநுகர் கனிகளை'ச் சொல்மாலைகளாக அழகு பெறச் சூட்டி மகிழ்ந்தார். நாமும் நாளும் அக்கனிகளை நுகர்ந்து இன்புறுவோமாக. ★



"மாதங்களில் நான் 'மார்கழி' யாயிருக்கிறேன்" என்று கூறியிருப்பதன் வாயிலாக மார்கழி மாதத்தின் பெருமை புலனாகின்றதல்லவா? கண்ணபிரானைப்பாடி நாம் வணங்கி இம்மை, மறுமைப் பயன்களையடைய சிறந்த மாதம் மார்கழி மாதமேயாகும்.

**மார்கழி நோன்பு :**

மார்கழி மாதத்தில் நாட்டில் மழையின்றி வளங்குன்றியபோது மழை பெய்யவும், அன்பும், அறமும் செல்வமும் உள்ள மணாளனையடையப் பெற்று இம்மையின்பத்தைப் பெறவும் வேண்டிக் கன்னிப்பெண்கள் இறைவனைத் துதித்து மார்கழி மாத முழுவதும் நோன்பிருந்தனர். கண்ணபிரானைத் தம் நாயகனாக அடைவதற்குக் கோபியர் கார்த்தியாயினி தேவியை வணங்கியதாகப் பாகவதத்தில் கூறப்பட்டுள்ளது.

இம்மைப் பயன் கருதிக் கன்னிப் பெண்களால் முற்காலத்தில் மேற்கொண்ட மார்கழி நோன்பானது தற்காலத்தில் மறுமையின்பம் கருதி அடியார்களால் பக்தியோடு பாடித் துதித்து வழிபடும் பெருமையடைந்தது எனலாம். அதனால் தான் மார்கழி மாதம் முழுவதும் விடியற் காலையில் ஆண், பெண் என்ற பாகுபாடின்றி நீராடிப் பக்தி இலக்கியங்

# மார்கழி நோன்பின் சிறப்பு!

மார்கழி நோன்பு மேற்கொள்ளும் வழக்கம் சங்ககாலம் முதற்கொண்டே கன்னிப் பெண்களிடம் வழக்கத்திலிருந்தது என்பதைச் சங்க கால நூலான பரிபாடல் முதலிய நூல்கள் வாயிலாக நாமறியலாம். மார்கழிநோன்பு ஆண்டாளம்மையார் காலமான கி.பி. 8-ஆம் நூற்றாண்டிலும், மாணிக்கவாசகர் காலமான கி. பி. 9 ஆம் நூற்றாண்டிலும் கன்னிப் பெண்களிடம் பெருவழக்கிலிருந்தது என்பதைப் பக்தி இலக்கிய நூல்களான திருப்பாவை, திருவெம்பாவை ஆகியவை வாயிலாக அறிகிறோம். மற்ற எல்லா மாதங்களை விட மார்கழிமாதமே புனிதத்தன்மையுடையது. கீதையில் கண்ணபிரான்

புலவர் மு. மணி, M.A. B.Ed.,
வேலூர்.

களான திருப்பாவையையும், திருவெம்பாவையையும் பாடி இறைவனை வழிபடுகின்றனர்.

"மார்கழித்திங்கள் மதி நிறைந்த நன்னாளால்" என்ற திருப்பாவையின் முதல் பாடல் முதல் அடியிலும் "மார்கழி நீராடேலோர் எம்பாவாய்" என்ற திருவெம்பாவையின் இறுதிப் பாடலின் இறுதியடியிலும் மார்கழி மாதத்தில் பெண்கள்

நோன்பு மேற்கொண்ட செய்தியினை நாமறிகிறோம். இக்காலத்தில் சமய வேறுபாடின்றிச் சிறிய பெரிய சைவ, வைணவக் கோயில்களிலும் விநாயகர் கோவில்களிலும் திருப்பாவையும், திருவெம்பாவையும் ஒலி பரப்பப்பட்டு வருவதைக் கேட்கிறோமல்லவா?

திருப்பாவை :

ஸ்ரீவில்லிப்புத்தூரில் வாழ்ந்த பெரியாழ்வாரின் மகளாகத்தோன்றிக் கண்ணபிரானையே தன் நாயகனாக அடைய வேண்டிப் பாடியதாக ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவையின் இறுதிப் பாடலில் கூறியுள்ளார். முப்பது பாடல்களைக் கொண்ட திருப்பாவையும், மாணிக்கவாசகர் இயற்றிய திருவெம்பாவையும் பாவை இலக்கியங்கள் என்றும் கூறுவர். இவ்விருஇலக்கியங்களிலும் பாவை நோன்பு பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மார்கழி மாதத்தில் கன்னிப் பெண்கள் வீடுவீடாகச் சென்று பெண்களைத் தூக்கத்தினின்று விடியற்காலையில் எழுப்பிச் சென்று ஆற்றில் நீராடிய பின் அழகிய இறைவனின் உருவத்தைச் செய்து வைத்து வணங்கி நோன்பிருந்த காரணத்தால் பாவை நோன்பு எனப் பெயர் வந்ததாகச் சான்றோர் கூறுவர். இவ்விரு நூல்களின் பாடல்களின் இறுதியில் 'பாவாய்'என்றே முடிவதால் பாவாய் என்ற விளிச்சொல்லைப் பெண்கள் வழிபடும் உருவத்தை அழைப்பதாகவோ அல்லது பாவை நோன்பு மேற்கொள்ளும் பெண்களை அழைப்பதாகவோ கொள்ளலாம்.

விடியற்காலைச் சிறப்பு :- திருப்பாவையில் கன்னியர்கள் கண்ணபிரானை இறைவனாகவும், காதலனாகவும் கருதித் துதித்துப் பாடியதாகப் பல பாடல்கள் உள்ளன. விடியற்காலையின் வருணனையை மிக அழகாகச் சித்தரித்துப் பாடப்பட்டுள்ள அடிகளாவன :



'' புள்ளும் சிலம்பின காண்
புள்ளரையன் கோயில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம்
கேட்டிலையோ
பிள்ளாய்! எழுந்திராய் '

என்ற ஆறாவது திருப்பாவையின் அடிகளால், 'பெண்ணே! பறவைகள் இறை தேடுவதற்காக எழுந்து ஆரவாரம் செய்வதைக் கேட்கவில்லையா? பறவையரசனான கருடாழ்வாரின் தலைவராகிய திருமாலின் கோயிலில் முழங்கும் வெண்சங்கின் பேரொலியைக் கேட்கவில்லையா? தூக்கத்திலிருந்து எழுவாயாக' என்ற கருத்தையறியலாம்.

கண்ணபிரான் பெருமை

கன்னிப் பெண்கள் கண்ணபிரானைப் புலவாறாகப் புகழ்ந்து பாடித் துதிப்பதாகத் திருப்பாவைப் பாடல்களில் காணலாம்.

'' ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி
நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்
மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ்செந்நெல் ''

என்ற மூன்றாவது திருப்பாவைப் பாடலடிகளால் திரிவிக்கிரம அவதாரத்தில் திருமால் மூன்று உலகங்களையும் தன் திருவடிகளால் தாவி அளந்தார். அத்தகைய சிறப்புடைய திருமாலின் திருநாமங்களை நாம் புகழ்ந்து பாடிப் பாவைநோன்பு மேற்கொண்டால் நாடெங்கும் ஒரு தங்குமில்லாமல் மாதந்தோறும் மூன்று முறை மழை பொழியும். அவ்வாறு பெய்தால் எங்கும் செந்நெல் பயிர்கள் செழித்து வளம் கொழிக்கும் என்ற கருத்துக்களைப் பெறுகிறோம்.

மேலும் திருப்பாவையின் 24ஆம் பாடலில் கண்ணபிரானின் திருவிளை

யாடல்களை மிகவும் அழகாகச் சித்தரித்துப் பாடப்பட்டுள்ளது. அப்பாடலாவது :-

" அன்றிவ்வுலகம் அளந்தாய் போற்றி
சென்றங்குத் தென்னிலங்கை
செற்றாய் திறல்போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய்
புகழ் போற்றி
கன்று குணிலா வெறிந்தாய்
கழல் போற்றி
குன்று குடையா வெடுத்தாய்
குணம் போற்றி
வென்று பகை கெடுக்கும்
நின்கையில் வேல்போற்றி
என்றென்றுன் சேவகமே ஏத்திப்
பறை கொள்வான்
இன்று யாம் வந்தோம் இரங்கேலோர்
எம்பாவாய்

'மாவலி என்ற அரசனின் கர்வத்தை மூன்றடியால் அளந்து அடக்கியவனே! உன் திருவடிகள் பல்லாண்டு வாழ்க. இலங்கை சென்று இராவணனையழித்து அருளியவனே, சகடாசுரன் அழியும்படி சகடத்தை அழித்தவனே, கன்றாய் நின்ற வத்சாசுரனை எறிதடியாகக் கொண்டு கபித்தாசுரன் மீது எறிந்து அருளியவனே! கோவர்த்தனக்கிரியைக் குடையாகப் பிடித்து இந்திரனது கருவத்தை அழித்து ஆயர்களைக் காத்தவனே. உன் குணங்கள் பல்லாண்டு வாழ்க! பகைவரை வென்றளிக்கும் உன் கைவேல் பல்லாண்டு வாழ்க! இவ்வாறாக உன் வீர சரிதங்களைப் புகழ்ந்து கொண்டு அடியார்களாகிய நாங்கள் உன்னிடம் பலன் வேண்டி வந்துள்ளோம் அருள் தருவாயாக!' என்பது பாடலின் கருத்தாகும். இப்பாடலில் கூறப்பட்டுள்ள புராணக் கதைகளில் வரும் மாபலி, இராவணன், சகடன், வத்சன், கபித்தன், இந்திரன் ஆகிய ஆறு பேர்களையும் ஸ்ரீஆண்டாள் சுட்டிக்காட்டி அவர்களின் வலிமையைக் கெடச் செய்ததின் வாயிலாக அகங்காரம், காமம், மோகம், பேராசை, மாத்சரியம், குரோதம் ஆகிய ஆறுவகையான தீய குணங்களையும் அழித்தவன் இறைவன் என்பதைப்பெறவைத்துள்ள பாங்கு போற்றுதற்குரியதல்லவா? இறைவனை அடைய விரும்புபவரும் மேற்கூறிய ஆறு தீய குணங்களை விட்டு விட்டு வணங்கினால் தான் இறைவனருள் கிடைக்கும் என்பதே மேற்கண்ட பாடலின் உட்கருத்தாகும்.

திருவெம்பாவை :

இப்பக்தி இலக்கிய நூல் மாணிக்கவாசகரென்னும் சைவப் பெரியாரால் பாடப்பட்டதாகும். திருவண்ணாமலைக்குச் சென்று தங்கிய மாணிக்கவாசகர் தம்மைப் பெண்ணாகவும், சிவபெருமானைத் தலைவனாகவும் பாவித்துத் திருவெம்பாவை பாடியருளினார். திருவெம்பாவை நூலிலுள்ள பாடல்களிலும் மழையை வேண்டியும் நல்ல கணவரையடையவும் பெண்கள் நோன்பிருக்கத் தங்கள் தோழியர்களைத் துயிலெழுப்புவதாகப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. கன்னிப் பெண்கள் நீராடியவிதத்தைக் குறித்து மாணிக்கவாசகர் பாடிய திருவெம்பாவையினடிகளாவன:-

" காதார் குழையாடப் பைம்பூண்
கலனாடக்
கோதை குழலாட வண்டின்
குழாமாடச்
சீதப் புனலாடி "

கன்னிப் பெண்கள் தங்களது குழை முதலான ஆபரணங்கள் ஒலிக்க விடியற்காலையில் குளிர்ந்த நீரில் நீராடினர் என வருணித்துப் பாடியுள்ள திறம் பாராட்டத்தக்கது.

மேலும் பாவை நோன்பின்போது இறைவனுடைய நாமத்தைப் பல முறை கூறிப் பாடுவர் என்பதை,

" சிவனே, சிவனே என்றோலமிடினும்
உணராய் உணராய் காண்
இருஞ்சீரான் சின்னங்கள் கேட்பச்சிவ
னென்றே வாய்திறப்பாய் "

என்ற பாடலடிகளால் சிவனைப் பல முறை துதித்துப் பாடினர் என்பதை யறியலாம்.

" போற்றியருளுக நின் ஆதியம்
பாதமலர்
போற்றியருளுக நின் அந்தமாம்
செந்தளிர்கள் "

எனச் சிவபெருமானைப் போற்றி வணங்கிக் கன்னிப் பெண்கள் சிவனருள் வேண்டியதாக மாணிக்க வாசகர் பாடியுள்ளார்.

" முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள் " என்று தொடங்கும் திருவெம்பாவைப் பாடலில் மக்கள் நலம்பெற மழை பொழிய அருள் புரியுமாறு மாணிக்கவாசகர் சிவபெருமானை வேண்டிப் பாடியுள்ள பொது நலப்பண்பு பாராட்டத் தக்கதாகும். திருப்பாவையும், திருவெம்பாவையும் பலபேர் சேர்ந்து பாடத்தக்க வகையிலமைந்த கூட்டுப்பாடலாகும். இப்பாடல்கள் யாவும் ஓசை நயமும் சந்த நயமும் கொண்டு கேட்போரை மகிழ்வித்து மனங்கவரச் செய்யும் தன்மையாய் அமைந்துள்ளன.

முற்காலத்தில் இப்பாடல்களைத் தவறாமல் மக்கள் பாடியதால் மாதம் மும்மாரி பெய்ய எல்லாவித நலங்களையும் பெற்று வாழ்ந்தனர் நம் முன்னோர். இளம் பெண்கள் மட்டுமின்றி நாமனைவருமே சமயப் பாகுபாடின்றித் திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களைப் பாடிவந்தால் இறைவனருளால் நம்நாடு மழை வளம் பெறுவதோடு இம்மையிலும், மறுமையிலும் பலவித நன்மைகளைப் பெற்றுப் பேரின்ப வாழ்வு வாழலாம்.





(32-ம் பக்கத் தொடர்ச்சி)

தேர்வார் திருமலை தேவனைத் தெய்வமென்றே
ஓர்வார் அவர்தமின் உண்மைநிலை—கார்வானின்
வண்ணத்தான் வாழ்த்தும் விருச்சிகம ளித்தல்ஓர்
திண்ணமென்வே றேது சுகம்.

சுகமெங்கே நாமத்தைச் சொல்லிப்பின் தேடும்
செகமக் கணம்சிறி தாகும்—அகமாய்
தனுவாய் கருணைத் தருவாய் திரிந்தான்
நினைவே தருமே நிறைவு.

நிறைவில்லா காசினியின் நீள்வாழ்வில் நீந்தி
கறைபட்டுச் சிந்தனை காய்ந்து—மறையே
மகர நெடுங்குழை மாநிதியே என்பார்
அகரத்தை எண்ணா தவர்.

எண்ணாதவர் பற்றொடே ஏக்கத்தால் இன்பமே
கண்ணென இந்நாள் களித்தவர்—மண்ணூடும்
காலத்தில் மட்டும் கருவாகும் பரமனைக்
கோலமாய்க் கொந்வார் கனிந்து.

கனிவினில் கார்மேகம் காதலிற் சேரும்
இனியனை எண்ணும் இகத்தீர்—நனியெழில்
மீனமாய் நான்மறை மீட்டான் முதலெனில்
ஏனோ விளக்கம் இனி.

இனிமை உறைந்துபோய் இன்னல்சேர் நேரம்
நினைவில் துயருடும் நேரம்—பனிபழைக்கும்
ஆதவனைத் தோற்றினான் அன்னோன்போல் ஆதரிப்பான்
வேதம் விளிக்கும்மா வித்து.

வித்தாய் விரிந்து வலியில் அனைத்தையும்
நித்தமும் காக்கப்பூ நின்றிட்டு—நித்திலத்(து)
ஆழிமகள் தன்மையாய் ஆள்கின்ற வேங்கடத்து
பாழியந் தோளனைப் பாடு.

பாடுமின் பெம்மானை பீடுடையான் பொன்மலையில்
வீடுடையான் வேங்கட வான்முகிலான்—ஈடில்லான்
நாயகத் தன்மையில் நானிலம் ஓச்சுபவன்
மாயவனாய் நிற்பான் மனம்.

மனமதில் சாரறிவாய் மற்றும் அணுவாய்
தினமுறை ஒருருவத் தகைத்தான்—தனதொளிர்
நம்பி அறிபடுமோர் நேர்பொருளான் மாமகரச்
செம்பொருளான் வேங்கடத் தான்.

தானெனும் தம்முடைய செல்வம் பொருளென்னும்
ஈனமதைத் தீய்த்திடுவான் இல்லாது—வானகத்தான்
நம்மகத்தின் சொந்தத்தான் நல்லுபாயம் நல்கிடும்
உம்பரனை உள்ளல் உயர்வு.

உயர்வுற் றுலவும் உயிர்களின் தன்னுள்
உயிரிலாத வைகளின் உய்வில்—அயர்வில்
அவைவாழ்வில் ஆற்றலாய் ஆவியாய் ஊர்ந்தான்
சுவையாகி நின்றான் செகம்.

செகமிதன் ஆதாரமாய் சூழ்கா ரணமாய்
இகத்தினை வாய்த்த இறைவன்—மிகுமெந்தச்
சுற்றமாகி மீளாத் துயரழிக்கும் வேங்கடத்து
கொற்றமாகி நிற்கின்ற கோன்.

கோனாம் குழலூதும் கோவிந்தன் தந்தநம்
ஊனும் அதில்வாழும் ஒண்ணுயிரும்—தானே
அவன்துய்க்கும் ஆன்றமா ஆண்மையுற்றான் ஆகில்
புவனைவழு தல்நம் பணி.

பணியென நின்றன் பெருமையை நித்தம்
கணக்கின்றிப் பேசக் கொடுப்பாய்—தணியா
விடாய்ஏதும் வந்திடுமா வேங்கடவா நின்னை
விடாதுணர்வ தையும் விட.

விடமுடியாமல் வருத்தமுற்றோம் இன்பம்
தொடமுடி யாமல் துயருற்றோம்—தடமலைத்
தேவா இவையிரண்டு தீதும் இனியென்மேல்
தாவா வரத்தினைத் தா.

தாமாய் வரும்பிணித் தொல்லையால் அன்றிகூடி
யாமாகத் தேடி யவற்றினால்—மாமறை
நின்நினைவை ஒய்க்கும் நிலையழிப்பின் வேங்கடவா
பின்துயர் எல்லாம் பொடி.

பொடியா கிமடியும் பூதவுடல் பாழில்
கடிதேகி வைகுந்தம் கூடும்—முடிவிதில்
ஏன்வியப்பு சாற்றுமின் ஏழுமலை நாரணனை
வானூடல் ஐயமிலா வாய்ப்பு.

வாய்க்கின்ற செல்வமும் மாளாத கல்வியும்
காய்க்கின்ற வீரத்தின் கூடலும்—தேய்கின்ற
வாணாளும் தந்தோனை வாழ்த்தா விடிலனைத்தும்
வீணாதல் என்றும் முடிவு.

முடிவடையா எச்சமயம் மூடப்பார்க் கையில்
முடிவடையா கொள்கைகளும் மூடும்—விடிவுதரா
தீங்கிவைகள் தொட்டுத் தொடர நினைநினைக்கும்
பாங்கை யருள்வாய் பரிந்து.

பரிந்தென்னை நின்றான் பணிசெய்யத் தூண்டி
விரிந்தாழும் வாழ்கலியில் மீட்டு—சரிந்தாழா
சிந்தையில் நின்வண்ணம் சேர்த்திடுவாய் சீராளா
விந்தத்தாள் வானோர்தே வா.

வானளந்தாய் கீழளந்தாய் மண்ணளந்தாய் வில்லினொடு
கானளந்தாய் வாமனனாய் கோனளந்தாய்—ஆனளந்தாய்
வேய்ஊதி தேனளக்கும் வெற்புரையோய் தாநின்னை
ஓயா துரைக்கும் உளம்.

உள்ளமூன்றி ஓச்சுகின்றாய் ஒண்திரு மார்வனாய்
வெள்ளமன்ன பேச விளைக்கின்றாய்—புள்ளூர்
முகுந்தத் திருமலைவாழ் மாநிதியே நீயோர்
திகட்டா மலரிடைத் தேன்.



திரு. வி. ஆர். ஸ்ரீநிவாஸ இராகவன், M.SC.,
சென்னை-44.

# 1991 - ஆம் வருடம் இராசிப் பலன்கள்

[ இந்த இராசி பலன்களை நாம் நட்சத்திரம் அல்லது ஜன்ம நட்சத்திரம் கொண்டு பார்க்க வேண்டும்' ஆங்கிலத் தேதி மட்டும் தெரிந்தவர்கள் அந்தந்தத் தேதிகளுக்கு எழுதப் பட்டிருக்கும் பலன்களைப் பார்த்துக் கொள்ளலாம். ஜன்ம ஜாதகத்திற் கேற்ப தசை, புக்தி ஆகியவற்றை அநுசரித்து இப்பலன்கள் சற்றுக் கூடுதலாகவோ, குறைவாகவோ இருக்கக் கூடும். ]

## மேஷம்

(அஸ்வினி, பரணி, கார்த்திகை 1-ஆம் பாதம்: ஏப்ரல் 15-மே 14)

மேஷ இராசிக்காரர்களுக்கு இவ் வாண்டு முதற்பகுதியில் பெரிய கிர கங்கள் எவையும் அவ்வளவு அநுகூல மாக அமையவில்லை. எனினும், குரு உச்சத்திலும் சனி தன் வீட்டிலும் சஞ்சரிப்பதால், கொஞ்சத்திற் குக் கொஞ்சம் நல்லன. தீயன இரண் டும் கலந்த பலன்களைத் தருவன வாய் அமைந்துள்ளன. வீட்டில் பெரியவர்களுக்கு அடிக்கடி உடல் நல மின்மை, உத்தியோகம் மற்றும் தொழிலில் பிற்போக்கு, கல்விக்குத் தடங்கல், வருமானத்திற்கு இடைஞ் சல் போன்ற பலிதங்கள் காணப் படுகின்றன. ஏப்ரல் முதல் சிறிது அநுகூலமான நிலைமை தோன்றும். வருமானம் நன்றாக இருக்கும். உடல் நலத்தில் மேம்பாடும் தொழிலில் ஊக்கமும் உண்டாகும். ஆண்டின் இடையிலுள்ள நான்கு மாதங்களில் மீண்டும் பிரச்னைகள் மிகுதியாக ஏற்படும். ஜூலையில் இச்சிக்கல் தீவிரமடையக்கூடும். எனினும் உட னேயே நிலைமை மாறி பண உதவி, வியாபாரம் மற்றும் தொழில் ஸ்திர மற்றும் சர சொத்துக்களின் சேர்க்கை ஆகியவற்றில் முன் னேற்றம், முயற்சிகளில் வெற்றி ஏற்படும். ஆண்டின் கடைசி நான்கு மாதங்களில் மிருந்த பொலிவு உண்டாகும். முயற்சி செய்யும் காரி யங்களில் வெற்றி, குழந்தைகள் மூலம் சுகம், வியாபாரத்தில் இலாபம், தொழிலில் உற்சாகப் பெருக்கு ஆகி யவை காணப்படுகின்றன. ஆண்டின் நடுப்பகுதியில், திருமணம் ஆகாதவர் களுக்குத் திருமண யோகம் உண்டா கும். மாணவர்க்கு ஆண்டின் இரண் டாவது பகுதி அதிக அநுகூலமுள்ள தாக இருக்கும்.

## ரிஷபம்

(கார்த்திகை 2, 3, 4ஆம் பாதங்கள்: ரோகிணி, மிருக சீர்ஷம் 1, 2 பாதங்கள், மே 15-ஜூன் 15)

இந்த இராசிக்காரர்களுக்கு சென்ற ஆண்டு இறுதியில் இருந்த இடைஞ் சல்கள் விலகி, அத்தனைக்கு அத் தனை சுப அநுகூல பலன்கள் ஏற் படும். மார்ச் முதல் ஜூலை வரை உள்ள காலம் எல்லா வகையிலும் - சுகம், சந்தோஷம், எடுத்த காரியங் களில் வெற்றி, கல்வி வாகனங்கள் சேர்க்கை, வீட்டில் புதுப்பொருள் கள் வாங்குதல் ஆகியவை அனைத்தி லும் - உதவி புரிவதாய் அமையும். ஜூலை மாதம் சற்றுக் கடுமை உள்ள தாகவும் பிரச்னைகள் நிறைந்ததாக வும் இருந்தாலும், மறுபடியும் உடனே நிலைமை சரியாகி, தைரியம் உற்சாகம், இன்பம், மகிழ்ச்சி ஆகி யன உண்டாகும். ஆகஸ்ட் மற்றும் செப்டம்பர் முன்னேற்றமாகவும், உற்சாகம் அளிப்பதாகவும் அமைந்து தக்கவர்களிடம் ஆதரவு மற்றும் கௌரவம், மனநிறைவு போன்ற நற் பலன்கள் நிறைந்து விளங்கும். ஆண் டின் கடைசி மாதங்கள்கூட சாதார ணமாய் இருந்த போதிலும், மிதந்த அளவு நற்பலிதங்களே ஏற்படும். இந்த இராசிக்காரர்கள் யாத்திரை, தூரப்பிரயாணம், உறவினர் மற்றும் நண்பர்களுடன் கூடியிருக்கும் மகிழ்ச்சி போன்ற நல்ல பலன்களை அநுபவிப்பர். டிசம் பரில் சத்துரு ஜயம், களத்திரசுகம், காரியசித்தி, வாகன லாபம், ஸ்திர சொத்து சேர்க்கை மற்றும் முயற்சி களில் வெற்றியும் அநுகூலமும் ஆகி யன தென்படுகின்றன. மாணவர்க்கு ஆண்டின் இரண்டாவது பகுதி நிரம்ப உற்சாகமளிப்பதாய் இருக்கும்.

## மிதுனம்

(மிருக சீர்ஷம் 3, 4 பாதங்கள், திரு வாதிரை, புனர்பூசம் 1, 2, 3 பாதங்கள் ஜூன் 15-ஜூலை 17.)

இவ்வாண்டு இந்த ராசிக்காரர் களுக்கு எல்லா வகையிலும் அநுகூல மானதாக அமைந்துள்ளது. தொடங் கிய காரியங்கள் யாவும் நல்லபடியாக நிறைவேறும். பண வரவு நன்கு அமையும். தொழிலில் அநுகூலமும் அபிவிருத்தியும் இருக்கும். ஏப்ரல்

டாக்டர். மு. சங்கமேசம்
தமிழாக்கம் : ஆலம்.

மே மாதங்கள் சாதாரணமாய் இருக்கும். உடல் நலமின்மைக் கோளாறுகள், மேலிருப் பவர்களுடன் எதிர்பாராத கலகம் மற்றும் இடைஞ்சல்கள், பிடிவாதப் போக்கு போன்ற அநுகூலமில்லாத பலன்கள் தோன்றக் கூடிய காலம். ஆயினும், மீண்டும் ஆகஸ்டிலிருந்து நிலைமைகள் நல்லபடியாக மாறும். பணவரவு நன்றாக இருக்கும். தொழி லில் இலாபம்ஏற்படும். கல்வி தடை யின்றி அமையும். இன்பம்,மகிழ்ச்சி, கௌரவம், ஆதரவு, செல்வாக்கு,

போன்ற நற்பலிதங்கள் உண்டு. வீட்டில் சுபநிகழ்ச்சிகள், குழந்தைகளுக்கு அநுகூலமான சம்பந்தங்கள், உறவினர் நண்பர்களுடன் சேர்ந்து மகிழ்ந்திருத்தல், சுப காரியங்களில் செலவு போன்ற நற்பலிதங்களின் அநுபவம் ஏற்படும். ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் இவை சிறப்பாக அமையும். இருப்பினும் பிடிவாதப் போக்கு தலைஎடுக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குடும்பத்தில் முன்னேற்றம் இருக்கும். ஸ்திர மற்றும் சர சொத்துக்கள் சேர்ப்பதில் தளரா ஊக்கத்துடன் மேற்கொள்ளப்படும் முயற்சிகள் வெற்றிபெறும். பொதுவாகச் சொல்லுமிடத்து, இவ்வாண்டில் மூன்றுக்கு இரண்டு பங்கு நற்பலிதங்களே அதிகமாய் இருக்கும். ஆண்டின் முடிவில் கவனிக்கும் போது எல்லாம் மன நிறைவளிப்பதாகவே இருப்பது தெரியும்.

## கடகம்

(புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்: ஜூலை 17-ஆகஸ்ட் 17).

இந்த இராசிக்காரர்களுக்கு ஆண்டு முழுவதும் யோகமுள்ளதாகவே திகழும். யாத்திரைகள், கௌரவம், மரியாதை. வீட்டில் சுபமான, மகிழ்ச்சிதரும் காரியங்கள், எதிர் பாராத இலாபங்கள் போன்ற நற்பலிதங்கள் காணப்படுகின்றன. ஏழில் உள்ள பாப யோகத்தினால் களத்திரத்திற்கு உடல்நல ஊறு, சச்சரவுகள், கொடுக்கல் வாங்கலில் செலவு போன்ற தீய பலன்களைச் சொல்லவேண்டும். பிடிவாதமான போக்குகளைத் தவிர்த்தல் நலம். ஆண்டின் நடுப்பகுதியில் தென்படும் சிக்கல்கள் விரைவிலேயே மறையும். எல்லாம் மறுபடியும் அநுகூலமாக மாறி மனத்திற்குச் சந்தோஷம், காரிய சித்தி, குழந்தைகள் சுகம், தனலாபம், சுபகாரியங்களில் செலவு போன்ற நற்பலிதங்கள் ஏற்படும். ஆகஸ்டிலிருந்து எல்லாத் துறைகளிலும் அநுகூலம் உண்டாகும்.

நினைத்த காரியங்கள் தடையின்றி நிறைவேறும். திருமணமாகாதவர்களுக்குத் திருமணம்நடக்க வாய்ப்புக்கள் கிட்டும். மாணவர்க்கு முன்னேற்றம் உண்டு. தொழிலில் விருப்பத்திற்கேற்ற இடமாறுதல், பதவி உயர்வு ஆகியவற்றுக்கும் வாய்ப்புக்கள் உள்ளன. பொதுவில் இவ்வாண்டு இந்த இராசிக்காரர்களுக்கு மேலான காலம் எனச் சொல்ல வேண்டும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1-ஆம் பாதம்: ஆகஸ்ட் 17-செப்டம்பர் 19.)

இந்த வருடம் இந்த இராசிக்காரர்களுக்கு சுபம், இலாபம் ஆகியவை கிடைக்கும் வகையில் தொடங்குகிறது. உற்சாகமும் ஊக்கமும் அளிப்பதாக இருக்கும். எதிரிகளை வெற்றி கொள்ளல், சுகம் சந்தோஷம் காரியசித்தி, பிரயாணங்கள் மூலம் இலாபம், யாத்திரைகள், குடும்ப சௌக்கியம் போன்ற நற்பலிதங்களை இவர்கள் அநுபவிக்கலாம். ஜூலையில் அனைத்துத் துறைகளிலும் அலைச்சலும் நிச்சயமின்மையும் தென்படும். அதன் பின்னர் எல்லாம் சுகமாகவும், சுலபமாகவும் நடைபெறும். அக்டோபரில் குடும்பத்தில் சில சிக்கல்கள் ஏற்படினும், பணவரவு, மனமகிழ்ச்சி, நல்ல உடல் நலம் போன்ற அநுகூலமான பலன்கள் இச்சிக்கல்களை எல்லாம் அகற்றி அவற்றால் கெடுதல் எதுவும் ஏற்படாது செய்துவிடும். இவ்வாண்டு கௌரவம், ஆதரவு, மதிப்பு, செல்வாக்கு விரும்பிய காரியம் நிறைவேறுதல், முயறசியில் வெற்றி போன்ற நற்பலிதங்கள் உண்டாகும். களத்திரத்தினுடனோ, தொழிலில் பங்குதாரர்களுடனோ, சக ஊழியர்களுடனோ, அதிகாரிகளுடனோ தகராறு ஏறபடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ஜூன், ஜூலை மாதங்களில் விவகாரங்களில் விழிப்புடன் நடந்து கொள்ள வேண்டும்.

ஆண்டு முடிவில் எல்லாம் சரியாகிவிடும். மாணவர்க்கு சோம்பலை விட்டுப் படித்தால் நற்பலன்கள் ஏற்படும்.

## கன்னி

(உத்திரம் 2, 3, 4 பாதங்கள், ஹஸ்தம், சித்திரை, 1, 2 பாதங்கள்: செப்டம்பர் 17—அக்டோபர் 17.)

இந்த இராசிக்காரர்களுக்கு இந்த ஆண்டு நல்லதும் கெட்டதும் கலந்த பலன்களாக இருக்கும். ஆண்டின் தொடக்கத்தில் இருக்கும் உற்சாகம் வரவரக் குறையும். ஆகஸ்டிலிருந்து டிசம்பர் வரையுள்ள காலம் அனைத்துத் துறைகளிலும் சிக்கல்கள் நிரம்பியதாகக் காணப்படுகிறது. குடும்பத்தில் சச்சரவுகள், ஸ்திர சொத்து விவகாரங்களில் தகராறுகள், கல்வியில் பிற்போக்கு, உத்தியோகம், மற்றும் தொழில் ஆகியவற்றில் எதிர்பாராத இடையூறுகள், உடல் நலமின்மையினால் பாதிப்புக்கள் போன்ற கெடுதலான பலன்கள் இருக்கும். மார்ச், ஏப்ரல் மே மாதங்களில் திரப்பவும் கவனத்துடன் இருக்க வேண்டும். வீட்டில் செலவு அதிகமாகஇருக்கும். வருமானத்திற்குத் தடங்கல்கள் ஏற்படும். ஆகஸ்டிற்குப் பிறகு, போதிய அளவிற்கு இச்சிக்கல்கள் அமைதியுறும். அதன் பின்னர், மன அமைதி கிட்டும். எந்தக் காரியமாயினும் ஆண்டின் நடுப்பகுதியில் தொடங்கி முடித்தால் தடையின்றி நடைபெற்றுப் பலன் தரும். முயற்சிகள் கைகூடும் மாணவாகள் சிரமப் பட்டால் அன்றி, வெற்றி அடைய முடியாது. முற்பாதி மே கடைசியிலும் பின் பாதி டிசம்பரிலும் சுப யோகம் ஏற்படும் வாய்ப்பு உளளது.

## துலாம்

(சித்திரை 3, 4 பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 பாதங்கள்: அக்டோபர் 17—நவம்பர் 16.)

இவ்வாண்டு இந்த இராசிக்காரர்களுக்கு அவ்வளவு அநுகூலமாயிராது.

முக்கியமாக, முற்பாதியில் கிரகங்கள் அவ்வளவு நன்மை தருவதாயில்லை. அபாய அறிகுறிகள், உடல் நலமின்மைப் பயம், ஸ்திர சொத்து சம்பந்தமான சிக்கல்கள், ஏதேதோ மனக்குழப்பங்கள் போன்ற பலன்கள் காணப்படுகின்றன. இருந்தாலும், கிரகங்களுக்குரிய பிற வலுவினால் இந்த கெடுதலான பலன்கள் யாவும் தாமாகவே அகன்றுவிடும். ஆண்டின் இரண்டாவது பகுதியில் நிலைமை கொஞ்சம் மாறும். கிரக சஞ்சாரத்தில் அநுகூலமான திருப்பம் ஏற்படும். காரியங்கள் நிறைவேறுதல், பணம், கௌரவம் ஆகியவற்றில் அபிவிருத்தி, செல்வாக்கு, தொழில், உத்தியோகம் இவற்றில் முன்னேற்றம், அரசியல் புகழ், எதிர்பாராத இலாபம் போன்ற நற்பலிதங்கள் காணப்படுகின்றன. ஆண்டின் கடைசிப்பகுதி சுகமாகவும் அமைதியாகவும் அமையும். எண்ணிய காரியங்கள் யாவும் நிறைவேறி மகிழ்வு கிடைக்கும். செப்டம்பருக்குப் பிறகு எல்லாத்துறைகளிலும் அநுகூலம் உண்டாகும். பொதுவாக, இவ்வாண்டில் உண்டாகும் நன்மை தீமை கலந்த பலன்களில் அதிக அளவு நற்பலிதங்களாகவே இருக்கும்.

## விருச்சிகம்

(விசாகம் 4-ஆம் பாதம், அநுஷம், கேட்டை, நக்ஷத்திரம்: நவம்பர் 16—டிசம்பர் 16.)

இந்த இராசிக்காரர்களுக்கு இந்த ஆண்டு கூடுதல் குறைவு என்றில்லாது ஒரே சீராக நல்லதும் கெடுதலும் கலந்த பலன்கள் ஏற்படும். முக்கியமான கிரகங்கள் நல்ல இடங்களில் அமைந்து, இராசியதிபதியும் பெருமளவிற்கு நன்மை தருபவராக இருப்பதால் இந்த இராசிக்காரர்களுக்கு இந்த வருடத்தில் அதிக அளவிற்கு நல்லதே நடக்கும். ஆண்டுத் துவக்கத்தில் மூன்று மாதங்கள் அநுகூலம் என்றே சொல்ல வேண்டும். பின்னர், அடுதத மூன்று மாதங்கள் அநுகூலமாயிராது. உடல்நலமின்மை, வீட்டில் தகராறுகள், அபாய அச்சம், பிரயாணங்கள், அவற்றினால் பணச் செலவு, கலக பயம் போன்ற கெட்ட பலன்கள் காணப்படுகின்றன. அதன் பின்னர், மூன்று மாதங்கள் மீண்டும் இடைஞ்சல் இல்லாது சுகம், சந்தோஷம், காரிய ஜயம், பிரயாணத்தால் இலாபம், கௌரவம், ஆதரவு, புண்ணிய காரியங்கள் நிகழ்த்துதல், குடும்ப விருத்தி போன்ற நற்பலிதங்கள் உண்டாகும். கடைசி மூன்று மாதங்களிலும்கூட சாதாரணமாக அதிக அளவிற்கு சுப பலன்களே இருக்கும். பொதுவாக, நன்மைகள் மிகுந்த ஆண்டாகவே இது அமையும். திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகள், கல்வி, சந்தோஷம், ஜயம் ஆகியவற்றில் இலாபம், பெருமை, புகழ், சுகமான பிரயாணங்கள் முதலியவை நிறைந்திருக்கும்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம், 1-ஆம் பாதம்: டிசம்பர் 16—ஜனவரி 14.)

இந்த ஆண்டு இந்த இராசிக்காரர்களுக்கு, தன ஸ்தானத்தில் சனி சஞ்சாரம், இராசியதிபதி எட்டாம் வீட்டில் சஞ்சாரம், ராகு, கேது நல்லதல்லாத இடங்களில் சஞ்சரித்தல் காரணமாக அநுகூலமற்ற பலன்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. ஆண்டின் நடுப்பகுதியில் மே, ஜூன், ஜூலை மாதங்கள், கடைசிப் பகுதியில் செப்டம்பர் மற்றும் நவம்பர் மாதங்கள் சற்றுக் கடுமையாகவும் பிரச்சினைகள் நிறைந்தும் இருந்தாலும், பொதுவாக இவ்வாண்டு அமைதியாகவே செல்லும் என நினைக்க வேண்டும். குடும்பத்தில் உடல்நலமின்மை, குழப்பங்கள், பணம் சம்பந்தமான இடைஞ்சல்கள் எதிர்பாராத ஆபத்துகள் போன்ற கெட்ட பலன்கள் படிப்படியாகக் குறைந்துவிடும். முதல் பகுதியில் எல்லாம் நல்லது கெட்டது கலந்தே இருக்கும். முயற்சிகள் கைகூடா. வருமானத்தில் குறைவு ஏற்படும். உடல்நலம் நன்றாயிராது. எனினும், இரண்டாவது பகுதியில் ஆரோக்கியம் மேம்படும். ஆனால், அப்போதும்கூட எதிர்பாராத துன்பங்கள், இடையூறுகள் இருந்து கொண்டே இருக்கும். ஆண்டின் மூன்றாம் பகுதியில் இந்த இடைஞ்சல்கள் விலகி மன அமைதி கிடைக்கும். பிரயாணங்கள், பந்துக்கள் வருகை போன்றவை இருந்தாலும் தொந்திரவு எதுவும் இராது. இராசியதிபதியின் வலுவினால் எல்லாச் சங்கடங்களும் விலகிப் போய், புது ஆண்டின் தொடக்கம் இன்பம் தருவதாக அமையும்.

## மகரம்

(உத்திராடம் 2,3,4, பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 பாதங்கள்: ஜனவரி 14—பிப்ரவரி 13).

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வருடம் அவ்வளவு உற்சாகமளிப்பதாக இல்லை. அதிக அளவிற்கு நல்லதும் கெட்டதும் கலந்த பலன்களாக இருந்தாலும், ஏதோ ஒரு குறை இருப்பதுபோல் தோன்றிக் கொண்டேயிருக்கும். வரவு குறைவாகவும் செலவு அதிகமாகவும் காணப்படுகிறது. பயணங்களும் அவற்றால் செலவும் ஏற்படும். ஏப்ரல் முதல் ஜூலை வரை உடல் நலமாக இருந்து, வீட்டில் சுப காரியங்கள், விவகாரங்களில் வெற்றி, முயற்சி செய்யும் காரியங்கள் கைகூடுதல், பண உதவி போன்ற நற்பலிதங்கள் காணப்படுகின்றன. ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் எதிர்பாராத அலைச்சல், காரணமின்றி உண்டாகும் உடல்நலமின்மையினால் பயம் போன்ற அநுகூலமில்லாத , பலன்கள் தென்பட்டாலும், அதற்குப் பிறகு எல்லாக் கெடுதல்களும் விலகி, மகிழ்ச்சியும் சுகமும் கிட்டும். கடைசி நான்கு மாதங்களில் அத்தனை பாதிப்பு எதுவும் இராது. உத்தியோகம், தொழில்

இவற்றில் மந்தமான போக்கு, கல்வி, விவகாரங்களில் பின்னடைவு, பிர யாணங்களினால் செலவு, விபத்து களினால் பயம் போன்றவை இருந் தாலும் அவை வருடக் கடைசியில் சரியாகிவிடும். பொதுவில், இவ் வாண்டு சற்றுக் கடுமையானதாகவே தோன்றுகிறது.

## கும்பம்

(அவிட்டம் 3, 4 பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்: பிப்ரவரி 13—மார்ச் 15.)

இவ்வாண்டு இந்த இராசிக்காரர் களுக்குப் பெருமளவு நிறைவு தருவ தாகவே இருக்கும். செலவுடன் கூடிய கஷ்டங்கள் இருந்தாலும், அவை கவனிக்கத்தக்க அளவிற்கு இரா. ஆண்டின் இரண்டாவது பகுதி யில் பணவரவுகூட நன்றாகவே இருக் கும். முயற்சிகள் கைகூடி வரும். எதிரிகளின்மீது வெற்றி, சுப அபி விருத்தி ஏற்படும். முதல் பகுதியில் வீட்டில் சுபகாரியங்கள், குழந்தை கள்மூலம் சந்தோஷம், கல்வி மற்றும் விஞ்ஞானத் துறைகளில் முன்னேற்ற மும் உற்சாகமும் உண்டாகும். இராசியதிபதி விரயஸ்தானத்தில் இருப்பதால் செலவுகள் மிகுந்து காணப்படும். பிரயாணங்களினால் செலவுப்பளு இருக்கும். வீட்டிலுள் ளோருக்கு உடல்நலமின்மைச் சிரமங் கள்கூட அவ்வப்போது தோன்றி சிரமப்படுத்தும். உத்தியோகம், தொழில் ஆகியவற்றில் குறிப்பிடத் தக்க மாறுதல்கள் எவையும் இல்லை. மாற்றங்கள் இரா. வீட்டில் எல்லாம் அநுகூலமான நிலைக்கு வரும். கல்வி சாமானியமாய் இருக்கும். முன்னேற் றத்திற்கான முயற்சிகள் நன்கு அமை யும்; எனினும், பலன் அதிகமாய் இராது. கொடுக்கல் வாங்கலில் குறைவு எதுவும் ஏற்படாது. பொது வாக, இந்த ஆண்டு அமைதியாகவே அமையும்.

## மீனம்

(பூரட்டாதி 4-ஆம் பாதம், உத்திரட் டாதி, ரேவதி: மார்ச் 15—ஏப்ரல் 14.)

இந்த இராசிக்காரர்களுக்கு இந்த வருடம் மிகவும் நம்பிக்கையுள்ள தாகவும் உற்சாகமளிப்பதாகவும் தொடங்குகிறது. பெரிய கிரகங்கள் யாவும் அநுகூலமான நிலைகளில் உள்ளன. சுபகாரிய முயற்சிகள், பணம், மரியாதை முதலியவற்றில் அபிவிருத்திக்கான பிரயத்தனங்கள் அனைத்தும் நல்ல முறையிலும் சுக மாகவும் நடைபெறும். ஆண்டின் எந்தப் பகுதியிலும் இடைஞ்சல் உண் டாகும் நிலைமைகள் எவையும் காணப்படவில்லை. காரிய ஜயம், வருமானத்தில் நல்ல முன்னேற்றத் திற்கான மாறுதல்கள், எதிர்பாராத வகையில் இலாபம், குழந்தைகளுக்கு சுபம், மகிழ்ச்சி ஆகியவை, குடும்பத் தில் உற்சாகம் தரும் நிலைமைகள் ஏற்படும். மாணவர்கள், வியாபாரி கள், உத்தியோகஸ்தர்கள் ஆகியோ ருக்கும் இவ்வருடம் கடந்த காலத்தை விட எத்தனையோ வகைகளில் பிர காசமானதாகத் தென்படுகிறது. எல்லா அநுகூலங்களும் நிறைந்தன வாய் நாட்கள் செல்லும். செப்டம் பர், அக்டோபர் தவிர எஞ்சிய பாதங்கள் யாவும் எவ்விதப் பிரச் சினையுமின்றி அமையும். அவ்விரண்டு மாதங்களில் மாத்திரம் உடல்நல மின்மை, விபத்தினால் பயம், தக ராறுகள் எவையும் இல்லாமல் பார்த்துக் கொண்டால் போதும்; இவ்வாண்டு எல்லா வகையிலும் வெற்றியுள்ளதாக இருக்கும்.



(4-ம் பக்கம் தொடர்ச்சி)

இத்தவறைத்தான் — இத்தப்பைத்தான் இன்று உலக அளவில் பலநாடுகள், நாட்டுத்தலைவர்கள் செய்து வருகின்றனர். முதலிரண்டு உலகப் போர்களும் இதனையே உணர்த்திட்டாலும், பல தலைவர்கள் தங்கள் பங்காக மூன்றாம் உலகப் போருக்கு வித்திடும் வகையில் வளைகுடாப் போர் எனும் ஒரு தீப்பொறியினை உண்டாக்கிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். ‘நீதிப்போர்’ என்றும் ‘புனிதப் போர்’ என்றும் தங்கள் போர் நடவடிக்கைகளுக்குப் பெயரிட்டுத் தங்கள் செய்கைகளுக்கு நியாயம் கற்பித்துக் கொள்ள முனைந்துள்ளது நகைப்புக்குரியதாகும். உயிர்களுக்கும், உடைமைகளுக்கும் அழிவைத் தரும் இப்போர்மேகம் உண்டாக்கிடும் பொருளாதார, அரசியல் சிக்கல்களையும், பிரச்சனைகளையும் சம்பந்தப்பட்டவர்கள் தீர்த்துக்கொள்ள முடி யும். ஆனால் இதுவே சமயம் மற்றும் இனக்காழ்ப்புணர்ச்சியைத் தூண்டிவிட்டால், போர் ஓய்ந்தாலும் அதனால் ஏற்படும் ‘வஞ்ச வடு’ பின்னாளில் பல போர்களுக்கு வழிவகுக்கும் என்பதை மனதில் கொண்டு, சமயம் என்பது தானும் தான் வாழும் சமுதாயமும் அமைதியுடன் வாழ்ந்திடவே என அறிதல் அவசியம் என்பதனையும், எவ்வித தவறான உணர்வுடன் தன் ஆற்றலையும் முயற்சியையும் பயன்படுத்துதல் கூடாது என்பதையும் சம்பந்தப்பட்டவர்கள் உணர்ந்தால் தான், பசித்தவனைக் கண்டு பணக்காரன் பதறுவதும், அழுதவன் கண்ணீரை அடுத்தவன் துடைப்பதும் நடைபெறும். அன்றுதான் மனிதன் தன் பிறவிக்குப் பெருமை காண்பான். இதனையே மலரும் இப்புத்தாண்டில் இவ்வையகம் எதிர்பார்க்கின்றது.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501

A view of T.T.D. Kalyana Mandapam at Visakhapatnam





Chief Minister Sri N. Janardhan Reddy is seen inaugurating.

Birth Centenary of Sri Sadhu Subrahmanya Sastri

Sri K. Rami Reddy, I.A.S., honouring Sri Sastri's son

Dr. C. Anna Rao unveiling the portrait of Sri Sastri



